# நீதிச்சார அனுபவத் திரட்டு


பொதுப் பதிப்பாசிரியர்

**க. அஷோக் வர்தன் ஷெட்டி, இ.ஆ.ப.**

ஆணையர், தொல்லியல் துறை

தரமணி, சென்னை - 113

பதிப்பும், ஆங்கில மொழிபெயர்ப்பும்

**முனைவர் சு. சௌந்தரபாண்டியன்**

காப்பாட்சியர்

அரசினர் கீழ்த்திசைச் சுவடிகள் நூலகம்

மற்றும் ஆய்வு மையம்

சென்னை - 5

அ.கீ.சு.நூ. வெளியீடு : எண் : 452
தமிழ் நூல் வெளியீடு : எண் : 127

# நீதிச்சார அனுபவத் திரட்டு

பொதுப் பதிப்பாசிரியர்
கு. அஷோக் வர்தன் ஷெட்டி, இ.ஆ.ப.
ஆணையர், தொல்லியல் துறை
தரமணி, சென்னை - 113

பதிப்பும், ஆங்கில மொழிபெயர்ப்பும்
முனைவர் சு. சௌந்தரபாண்டியன்
காப்பாட்சியர்,
அரசினர் கீழ்த்திசைச் சுவடிகள் நூலகம் மற்றும் ஆய்வு மையம்
சென்னை - 5


2002

முதற் பதிப்பு 2002
பிரதிகள் 500

நீதிச்சார அனுபவத் திரட்டு



பொதுப் பதிப்பாசிரியர்

க. அஷோக் வர்தன் ஷெட்டி, இ.ஆ.ப.
ஆணையர், தொல்லியல் துறை

பதிப்பாசிரியர்

முனைவர் சு. சௌந்தரபாண்டியன்
காப்பாட்சியர்,
அரசினர் கீழ்த்திசைச் சுவடிகள் நூலகம் மற்றும் ஆய்வு மையம்

விலை ரூ.

வெளியீடு

அரசினர் கீழ்த்திசைச் சுவடிகள் நூலகம் மற்றும் ஆய்வு மையம்
சென்னை - 600 005

அச்சிட்டோர் :

தமிழ்நாடு அரசு
தொல்லியல் துறை அச்சகம்
தரமணி, சென்னை - 600 113

G.O.M.L. Publication No. 452
Tamil Publication No. 127

# A COMPENDIUM OF THE SOLIDITY OF MORALS

*General Editor :*

**K. ASHOK VARDHAN SHETTY,** I.A.S.
Commissioner
Department of Archaeology
Tharamani, Chennai-113

*Edited and Translated by:*

**Dr. S. SOUNDARAPANDIAN**
Curator
Government Oriental Manuscripts Library and Research Centre
Chennai - 600 005

First Edition 2002
No. of Copies : 500

A Compendium of the Solidity of Morals



General Editor
K. Ashok Vardhan Shetty, I.A.S.
Commissioner
Department of Archaeology

Edited and Translated by :
Dr. S. Soundarapandian
Curator
Government Oriental Manuscripts Library and Research Centre

Price : Rs.

Published by :
Government Oriental Manuscripts Library and Research Centre
Chennai - 600 005

Printed at :
Department of Archaeology
Tharamani, Chennai - 600 113

**க. அஷோக் வர்தன் ஷெட்டி,** இ.ஆ.ப.
**ஆணையர், தொல்லியல் துறை**

3-வது குறுக்கு சாலை
தரமணி
சென்னை - 600 113
04 - 12 - 2002

# அணிந்துரை

சென்னை அரசினர் கீழ்த்திசைச் சுவடிகள் நூலகம் மற்றும் ஆய்வு மையம் பாதுகாத்துவரும் சுவடிகளில் ஒன்றுதான் நீதிச்சார அனுபவத்திரட்டு என்ற ஓலைச்சுவடி (Palm leaf) ஆகும். இந்த ஓலைச்சுவடியே இன்று, முதன் முதலாக, அச்சு வடிவில் நூலாகியுள்ளது.

இந்தியாவின் இன்றைய சூழ்நிலையில் நீதி போதனைகள் மிகமிகத் தேவையானதாகும். இந்த நோக்கில் இந்நூல் மிகுந்த முக்கியத்துவத்தைப் பெறுகிறது.

பொதுவாக 'நீதி வழங்கினால் மட்டும் போதாது. நீதி வழங்குவதாகத் தெரியவும் வேண்டும்'. இது நீதியின் அடிப்படையான தத்துவம் ஆகும். இந்திய அரசியலமைப்புச் சட்டம் குடிகளின் உரிமைகளைப் பாதுகாப்பதற்கு வேண்டிய ஏற்பாடுகள் செய்துள்ளது.

தமிழ் நூல்களில் பல நீதி நூல்களாகவே உள்ளன. சமய நூல்களாகிய புராணங்களும் சமய நீதிகளை வற்புறுத்தவே எழுந்தன. ஐம்பெருங்காப்பியங்களில் சிலப்பதிகாரம், 'அல்லவை செய்வார்க்கறங் கூற்றம்', 'பத்தினிப் பெண்டிரை யாவரும் போற்றுவர்', 'ஊழ்வினை உருத்து வந்தூட்டும்' என்னும் மூன்று நீதிகளையும் வற்புறுத்துகிறது. அறிஞர் அறிவுரைகள் கல்வி கற்பதே நீதி வழி ஒழுகுதற்கென்னும் கருத்தை வலியுறுத்துகின்றன.

நீதியை மட்டும் வற்புறுத்த எழுந்த நீதி நூல்களில் தலையாயது திருவள்ளுவப்பெருமான் அருளிய திருக்குறள் ஆகும். நாலடி நானூறு, முன்றுறை அரையனின் பழமொழி நானூறு, பெருவாயின்முள்ளியார் இயற்றிய ஆசாரக்கோவை, நல்லாதனார் இயற்றிய திரிகடுகம், விளம்பிநாகனாரின் நான்மணிக் கடிகை, காரியாசானியற்றிய சிறுபஞ்சமூலம், கணிமேதையாரின் ஏலாதி, கூடலூர் கிழார் இயற்றிய முதுமொழிக்காஞ்சி, பூதஞ் சேந்தனாரின் இனியவை நாற்பது, கபிலரின் இன்னா நாற்பது போன்ற நூல்கள் யாவும் நீதியைப் பற்றிக் கூறும் நூல்களாகும்.

17-ஆம் நூற்றாண்டில் வாழ்ந்த குமரகுருபரரின் நீதிநெறி விளக்கம், சிவப்பிரகாச சுவாமிகள் இயற்றிய நன்னெறி, நீதி வெண்பா, ஔவையாரின் வாக்குண்டாம், நல்வழி, கொன்றை வேந்தன், ஆத்திசூடி, அதிவீரராமபாண்டியன் எழுதிய நறுந் தொகை, உலகநாதன் எழுதிய உலக நீதி ஆகியன கல்வி யறிவினரும் கற்றறியும்படி வழங்குகின்ற நீதி நூல்கள் ஆகும்.

உலகியலைக் கூறும் நூறு செய்யுட்களான சதகம் பல தமிழ்நாட்டிலே தோன்றின. அவற்றுள் தண்டலையார் சதகம், குமரேச சதகம், அறப்பளீசுர சதகம் போன்றவை குறிப்பிடத் தக்கவை.

பதினெட்டாம் நூற்றாண்டில் பல நீதி நூல்களெழுந்தன. இராமானுச கவிராயர் மாணவரான வேதகிரி முதலியார் என்பவர் மனுநீதி சதகம், நீதி சிந்தாமணி என்னும் நூல்களை எழுதினார்.

19-ஆம் நூற்றாண்டில் தாண்டவராய முதலியார் என்பவர் மகாராட்டிரத்திலிருந்து 'பஞ்சதந்திரம்' என்னும் நூலை மொழி பெயர்த்தவர். இது அரச நீதியை விளக்குவது. இந்நூற்றாண்டிலேயே வேதநாயகம் பிள்ளை அவர்களால் பெண்மதிமாலை என்னும் நூலும், முத்துராமலிங்க சேதுபதியின் நீதிபோதமும் இயற்றப்பட்டன. மேலும் விவேக சிந்தாமணி என்னும் தனிப்பாடல் தொகுதியும் நீதியைப் போதிக்கின்றது.

இந்தியாவின் பண்டைய இலக்கியங்களின் தலையாய நோக்கம் நன்னெறி காட்டுவதாகும். இந்தியர்களுடைய எந்தக் கதையைப் பார்த்தாலும் அது ஏதேனும் ஒரு நீதியைப் போதிப்பதாகவே

இருக்கும் என்று சர் வில்லியம் ஜோன்ஸ் (Sri william Jones) என்ற அறிஞர் கூறினார்.

புத்தரின் ஜாதகக் கதைகள் (Bhuddha Jataka Stories) நீதி புகட்டுவனவாக உள. அறம் பற்றிய கவிதையின் தொடக்கத்தை ரிக் வேதத்திலும் இதிகாசங்களிலும் காணலாம். மகாபாரதத்தி லுள்ள அனுசாசன பருவமும், சாந்தி பருவமும், யக்ஷப் பிரச்சினமும், விதுர நீதியும் நீதிபற்றிக் குறிப்பிடும் பகுதிகளுள் மிகவும் பழையன.

வரலாற்றுக் காலத்தில் தோன்றிய பழைய சமஸ்கிருத நீதி நூற்கள், அர்த்தசாஸ்திரத்தின் ஆசிரியரான சாணக்கியர் செய்த சாணக்கிய சதகம், பர்த்துருஹரி இயற்றிய நீதி சதகம், வைராக்கிய சதகமும் ஆகும்.

நீதி இரத்தினம், நீதி சாரம், நீதி பிரதீபம் என்ற நீதி நூற்களும் உள.

பஞ்ச தந்திரம் (5 - ஆம் நூற்றாண்டு) ஹிதோபதேசம் ஆகியவை ராஜ்ய தந்திரம், தனி மனித ஒழுக்கம், சமூக நடத்தை பற்றிய தத்துவங்களை விலங்குக் கதைகளைக் கொண்டு அழகாக விளக்குகின்றன. இக்கதைகள் பஹ்லவி ((Pahlavi) மொழியிலும் அரபு மொழியிலும் மொழி பெயர்க்கப்பட்டுப் பின்னர் அங்கிருந்து உலக முழுவதும் பரவியுள்ளன.

பௌத்தர்கள் எழுதிய நீதி நூல்கள் திவ்வியவதானம், அவதான சதகம், ஜாதகமாலா என்பன நல்லொழுக்கம் போதிக்கும் நூல்கள். இவை 2 (அ) 3-ஆம் நூற்றாண்டாக இருக்கலாம்.

நல்லொழுக்கத்தை உணர்த்தும் இலக்கிய வகையில் அந்தியாப தேசம், அந்நியோக்தி, வியாஜோக்தி என்ற பிரிவு உள்ளது. வேம்பு, மா, ஆல், காகம், குயில், சிம்மம் முதலியவற்றை வைத்துக் கொண்டு குணதோஷங்களைக் காட்டும் மரபு இதில் காணப்படும்.

பண்டைய இந்தியர்கள் இயற்கைக் காட்சிகளைக் கண்டு களித்து அவற்றிலிருந்து பல அறநெறிகளைக் கற்றுக் கொண்டனர் என்று உபநிடதம் கூறுகிறது.

ஓலைச் சுவடியில் பாடல்களாக உள்ள இந்த அரிய நீதி நூலைச் செம்மையாகப் பதிப்பித்து, குறிப்புகள் எழுதி, ஆங்கிலத்திலும் மூலம், மற்றும் குறிப்புகளை மொழிபெயர்த்த காப்பாட்சியர் முனைவர் சு. சௌந்தரபாண்டியன் பெரிதும் பாராட்டுக்குரியவர் ஆவார்.

தொல்லியல் துறை அச்சகத்தில் இந்தச் சிறப்புமிகு நூலை அச்சாக்கம் செய்து தந்த தொல்லியல் துறையின் மூத்த தொல்லியல் ஆய்வாளரும், சென்னை பதிவு அலுவலரும், உதவி இயக்குநரு மாகிய திரு. மா. சந்திரமூர்த்தி அவர்கள் போற்றுதலுக்கு உரியவர் ஆவார்.

தமிழ் உலகம் இந்த அரிய நூலின் பயனைப் பெறும் எனப் பெரிதும் நம்புகிறேன்.

இவண்,

க. அசோக் வர்தன் ஷெட்டி, இ.ஆ.ப.

# பதிப்புரை

கி. பி. 1788-இல், **நாகைச் சத்தியஞானி** என்ற புலவரால் செய்யுள் வடிவில் இயற்றப்பட்ட நீதிப்பனுவல் இது.

அரசினர் கீழ்த்திசை சுவடி நூலகத்தில் உள்ள இரு ஓலைச் சுவடிகளின் (டி. 181; டி.182) பதிப்பே இப்போது வெளியிடப் படுகிறது.

இந்நீதி நூல்,

1. மானிடர் இயல்பு
2. நீதி இயல்பு

என்ற இரு பிரிவுகளாக இயற்றப்பட்டுள்ளது.

**இந் நூலின் காலம்** யாது?

இதற்காக ஆய்ந்தபோது, நூலிறுதிப் பாடலில் "சகாத்தந் தானாயிரத்தி யெழுநூற்றி யோரொருபதின்மேல்" என்ற குறிப்பு கிட்டிற்று.

அஃதாவது, இப்பனுவல், சாலிவாகனச்சகம் 1710-இல் இயற்றப் பட்டுள்ளது. இதற்கு இணையான கிறித்தவ ஆண்டு **கி.பி. 1788 ஆகும்.**

எனவே, இற்றைக்கு **200 ஆண்டுகளுக்கு** முற்பட்ட தமிழில் **எழுந்த அரிய நீதிநூல் இது** என்பது பெறப்படுகிறது.

அரசினர் கீழ்த்திசை சுவடி நூலகப் பருவஇதழ் தொகுதி 5, பகுதி 1 இல், **நீதிசாரக்கரு** என்றொரு சிறு நூல் அச்சிடப் பட்டுள்ளதை இங்கு குறிப்பிடலாம். நீதிசாரக்கரு, 66 விருத்தப் பாடல்களைக் கொண்டது; **அரசநீதி** பகர்வது. நீதிசாரக்கருவின் ஆசிரியர் பெயர் அறியப்படவில்லை.

**நீதிச்சார அனுபவத் திரட்டு** எனும் நமது இப்பதிப்பில், மூல ஓலைச் சுவடி அப்படியே பதிப்பிக்கப்பட்டுள்ளது: பதிப்பு

நெறிகளுக்கு ஏற்ப, பிழைகள் திருத்தப்பட்டுள. படிப்பாரின் எளிமைக்காக, ஆங்காங்கே பதிப்பாசிரியரால் விளக்கம் தரப் பட்டுள்ளது. விளக்கம் என்ற தலைப்பின் கீழ்வரும் கருத்துகள் மூலஓலையில்இல்லாதவை என்பது அறியத்தக்கது.

நமது இந்நூலின் பதிப்புக்குப் பயன்பட்ட இந்த ஓலைச் சுவடியானது, காலின் மெக்கன்சி (1754-1821) தொகுத்ததாகும். இவர் ஸ்காட்லாந்து நாட்டினைச் சேர்ந்தவர் என்பது குறிப்பிடத் தக்கது. இவர் தொகுத்த நீதிச்சார அனுபவத் திரட்டு எனும் இந்த ஓலைச் சுவடிக் கட்டையின் மீது மெக்கன்சியின் அரக்கு முத்திரை (Seal C.C.M. என்றுளது. Colonel Colin Mackenzie) தாவர வண்ணங்களைக் கொண்டு அழகுறத் தீட்டப்பட்ட பூக்கள், முத்திரை உள்ள இதே கட்டைகளின் மீது வரையப் பட்டுள்ளன! இவை அழியா ஓவியங்கள்! மஞ்சள், பச்சை சிவப்பு முதலிய வண்ணங்களில் இவ்வோவியம் மிளிர்கிறது! இவ்வகையில், ஓலை சுவடி ஆய்வு ஓவிய ஆய்வுக்கும் இடம் தருகிறது!

மொழி ஆய்வுக்கு நமது இச்சுவடி பெரிதும் நிலைக்களனாகத் திகழ்கிறது!

நீதிச்சார அனுபவத் திரட்டு எனும் இந்நீதிநூலின்கண் பயிலும் பாக்கள் மிக மிக எளிய நடையின!

இதன்கண் உள்ள சில பாக்கள் உரைநடைக் கவிதை (வசன கவிதை) என்ற வகையில் சேர்க்கத் தக்கனவாக உள்ளன!

எனவே, எளிய கவிதைகளை எழுதும் மரபு நாகைச் சத்திய ஞானி போன்ற கி.பி, 18-ஆம் நூற்றாண்டுப் புலவர்களாலேயே பின்பற்றப்பட்டுள்ளது என்பது குறிப்பிடத்தக்கது. பாரதியாரால் (1882-1921) அல்லது அவர் காலத்தில்தான் முதன்முதலில் எளிய தமிழ்க் கவிதை எனும் பாட்டுப் புரட்சி ஏற்பட்டது என்பது தவறானதாகும்!

நாகைச் சத்தியஞானி எனும் இந்நூற்புலவர் சைவர்; சைவ சித்தாந்தம் பயின்றவர். இதற்கான குறிப்புகள் இந்நூலிலேயே உள்ளன.

வெறும் நீதிகளை மட்டும் கூறும் நூலல்ல இது!

அரிய சித்தமருத்துவப் பண்புகளையும், உடற்கூறுகளையும் நவிலும் நூலாகும் இது!

சில நீதிகளை இந்நூல் இத்தனை பண்புகள் கொண்டவை என்று வரையறுத்துக் கூறுகிறது! இது இதற்கு முந்தைய நீதி நூற்களில் காணப்படாதது!

பல மேலாய்வுகளுக்குக் கருவூலமாகிய இந்த ஓலைச்சுவடிப் பதிப்பை வெளியிடுவதில் அரசினர் கீழ்த்திசைச் சுவடிகள் நூலகம் மற்றும் ஆய்வு மையம் பெருமை அடைகிறது!

அன்பன்

**முனைவர் சு. சௌந்தரபாண்டியன்**

எம்.ஏ.(தமிழ்), எம்.ஏ.(ஆங்கிலம்), பி.எட்., டிப்.வ.மொ., பிஎச்.டி.

காப்பாட்சியர்

அரசினர் கீழ்த்திசைச் சுவடிகள் நூலகம் மற்றும்

ஆய்வு மையம், சென்னை

# EDITOR'S INTRODUCTION

This didactic poetic work had been sung by Satyagnāni of Nagappattiṇam (Tamilnadu) in 1788 A.D.

This is a publication of the two palmleaf manuscripts (D. 181; D. 182) of G.O.M.L.

This has been divided into two parts :-

1. Nature of human beings
2. Nature of morality

What is the period of this moral piece?

When tried, a rare internal evidence was met with at the last leaf. It said, "Written in Salivahana sahabtam 1710".

That is, this book was composed in A.D. 1788.

So, we are supplied with a rare Tamil didactic work composed 200 years ago.

In a bulletin of G.O.M.L., Vol 5, Part I, a work entitled as **Nitisarakkaru** has been published. This contains 66 stanzas in Viruttam metre. Morals for kings is a special feature of this book. However, author of this work has not been known yet.

Our present edition is the reproduction of the palmleaf, **Niticcara Anubavattirattu**. However, corrections, needed as per the norms of editing, have been made by the editor. It must be noted here that the portions under Explanation, have been rendered by the editor.

The palm leaf utilised for our present edition was the one collected by Colonel Colin Mackenzie (1754-1821), a native of Scotland.

This palm leaf bundle bears a magnificent seal of Machenzie as **C.C.M** (Colonel Colin Mackenzie).

Moreover, on the very same planks, we have exquisite picture of flowers in multi colours such as yallow, green, red etc.

In this way, palmleaf research *renders ample room* even for the research of the art of drawing. It must be noted that the colours used on the planks are fine **Vegetable colours.**

In the field of **Language Research,** our present work renders ample room!

The stanzas in our, 'Compendium of the solidity of morals', are very *lucid.*

Some stanzas in our book here are of the type of **Modern Prosepoetry!**

So, during the 18th century itself the art of writing prose poetry or modern poetry had cropped *in* a certain degree.

So, we can't say that only by writers like Bharati (1882-1921) or during 19th century alone the moden poetry style developed.

Our bard Satyajnāṉi of Negapattinam is a Saivaite; He has the knowledge of Saiva Siddhanta for which internal evidences are available herein.

This is not a publication which deals with only morals.

Very rare Siddha nuances and body characters also have been delineated here.

In some explanations of equity, this book lists out very clearly the various features which we cannot see in previous Tamil books.

Definitely this will come a long way for researchers of variegated fields.

Yours loving,

**Dr. S. Soundarapandian**
(M.A. (Tamil), M.A. (Eng.), B.Ed, Dip. Skt, Ph.D
Curator
G.O.M.L.R.C.
Chennai-5

# நீதிச்சார அனுபவத் திரட்டு

## நூல்

1. மனிதரியல்பு
2. நீதியியல்பு

ஆகவியல்பு 2க்குக் கவி 120க்கு விவரம் :-

பாயிரமாவது,

| | | | |
|---|---|---|---|
| 1. | கடவுள் வணக்கம் | கவி | 1 |
| 2. | பலச்சுருதி | கவி | 2 |
| 3. | அவையடக்கம் | கவி | 1 |
| 4. | நூலைக் கற்குமியல்பும், கற்பிக்குமியல்பு முரைக்கின்றது | கவி | 3 |
| 5. | இந்நூலைக் கற்பவருக்குப் பயன் கூறுகின்றது | கவி | 1 |
| 6. | நூற்பயனைத் தொகுத்துரைக்கின்றது | கவி | 2 |
| | ஆகப் பாயிரம் | கவி | 10 |

### விளக்கம்

நீதியின் இயல்பையும், மனிதரின் இயல்பையும் குறிப்பிட்டுக் கூறுவது சிறப்பானது.

மனிதரின் இயல்புக்கே நீதி வேண்டப்படுகிறது!

மனிதரின் தீய இயல்புகள் இல்லாவிட்டால் நீதிக்கு வேலையில்லை அல்லவா? மனிதனுக்குள் இருக்கும் விலங்குணர்வு அவ்வப்போது வெளிவந்து தலையைக் காட்டுவதால் சிக்கல்கள் தோன்றுகின்றன!

எனவே, முதலில் மனிதனின் இயல்பை நாம் விளங்கிக் கொள்ளவேண்டும் என்ற அறிவுரை மேற்பட்டியலின் மூலம் நமக்குக் கிட்டுகிறது!

நீதியானது கல்லாதவருக்கு மட்டும் தேவைப்படுவது என்று கூறமுடியுமா? முடியாது!

நீதியானது கற்றவருக்கும் தேவைப்படுகிறது! கற்றவர்கள் பல்வேறு வகைப்பட்ட தவறுகளைச் செய்கிறார்கள்! திட்டமிட்டே செய்கிறார்கள்!

ஆகவே, கற்றோர்க்கும் கல்லாதோர்க்கும் ஒருசேரத் தேவைப் படுவது நீதி என்பதாகிறது!

மேற்பட்டியலில், கடவுள் வணக்கம் உட்பட, நூலின் முகப்புக் கவிகள் யாவும் பாயிரம் என்ற பிரிவில் அடக்கப்பட்டுள்ளது நோக்கற்பாற்று.

"கடவுள் வணக்கம் பாயிரத்தில் சேருமா? சேராதா?" என்ற குழப்பத்தை இச்சுவடி தீர்த்து வைத்துள்ளது.

கற்கும் வழி, கற்பிக்கும் வழி என்றெல்லாம் பிரித்துக் குறிப் பிட்டிருப்பதும் கவனத்திற்குரியதே.

இவ்வாறு பல்வேறு துறைகளிலும் உரிய வழிமுறைகளை மிகப்பழங்காலத்திலிருந்தே வகுத்துக் கண்டவர்கள் தமிழர்கள்!

# A COMPENDIUM OF THE SOLIDITY OF MORALS

(Text)

Account for the 120 stanzas that deal with,

1. Human nature
2. Morality nature.

The *Prologue* contains,

| | | |
|---|---|---|
| 1. | Invocation - Stanza | 1 |
| 2. | Stanzas on Efficacy | 2 |
| 3. | Stanza on Professed Modesty | 1 |
| 4. | Method of Learning and method of Teaching - stanzas | 3 |
| 5. | Profit or learning this book - stanza | 1 |
| 6. | Consolidation of the Aim of the Book - stanzas | 2 |
| | In total, the Prologue has stanzas | 10 |

## EXPOSITION

The mention about the nature of moral and that of human is conspicuous.

Morality is needed in regard to the behaviour of individuals.

If there is no evil mind, then the exigence for morality does not arise!

Problems arise whenever the animal-passion in man surfaces up!

So, firstly, we must understand the human nature! This is the lesson we get from the above list.

Cen we argue that moral preaching is needed for only illiterates? Not at all!

Moral preaching is very much needed for educated also. Learned do commit mistakes quite wantonly!

So, didactic teaching is a must for both the educated and uneducated!

In the above seen list, it may be noted that under the classification of *Prologue*, Invocation has been included.

This has wiped out our doubt that whether the invocation stanza should be counted within the Prologue or not.

*Teaching* method and *Learning* mode also have been touched upon, which is also conspicuous.

In this, in many a field, Tamils have classified the crystal clear ways quite pertinently.

மனிதரியல்பு

*மனிதரியல்பாவது*

*நால்வகை மனிதர் குணாகுணமுஞ்,*
*சொல்லுஞ், செய்கையு முரைக்கின்றது,*
*கவி 26*
*தற்காலக் கருமநிலை உரைக்கின்ற கவி 10*

ஆக, மனிதரியல்பு, பாயிர முட்படக் கவி 46

[10+26+10=46]

## Human nature

Under the head '*Human nature*',

| | |
|---|---|
| The characteristics and activities of the four kinds of man in stanzas | 26 |
| Present day position in stanzas | 10 |
| In totō, *Human nature* explained, inclusive of Prologue, stanzas | 46 |

[10+26+10=46]

### நீதியியல்பு

| | | |
|---|---|---|
| நீதியினது தொகையும், பாதமு முரைக்கின்றது | கவி | 16 |
| அநீதியின் தொகையும் பாதமு முரைக்கின்றது | கவி | 6 |
| அரசன் திறம், செங்கோற்றிறம், அறிஞர் திறமுரைக்கின்றது, | கவி | 14 |
| நீதியினதிகார வகையுரைக்கின்றது | கவி | 9 |
| அநீதியினதிகார வகையுரைக்கின்றது | கவி | 5 |
| பலதிரட்டு முரைக்கின்றது, | கவி | 10 |
| சரீரத்திறம், தாதுத்திற முரைக்கின்றது | கவி | 14 |
| ஆக, நீதியியல்பு | கவி | 74 |
| ஆகவியல்பு 2க்குக் | கவி | 120 |

### விளக்கம்

மேற்பட்டியலில், அரசன் திறம் என வந்துள்ளது நோக்கற்பாற்று!

"மன்னன் உயிர்த்தே மலர்தலை உலகம்" என்ற அடி ஈண்டு ஒப்பிடத்தக்கது.

"மன்னன் எவ்வழி மக்கள் அவ்வழி" என்ற பழஞ்சமுதாயத் தினை ஈண்டு நினையல் தகும்.

தமிழ் நீதிநூற்களை ஆய்ந்தால், மொழியப்பட்டுள்ள நீதிகளிற் பல அரசன், அரசாட்சி தொடர்பானவை என்பதை அறியலாம்!

திருக்குறள் இதற்கு நல்ல சான்று!

நீதி நூல் மட்டுமல்லாது, பல்வேறு இலக்கிய வகைகளை எடுத்துக்கொண்டாலும், அவற்றிலெல்லாம் அரசன் சார்புடைய பல களங்களை நாம் காணலாம்!

இதற்குக் காரணம் யாது?

ஒருவகையில் நோக்கினால், அரசனே சில குடிகளை ஏற்படுத்தி, சில ஊர்களை அமைத்துச், சில சமுதாயங்களையே உண்டாக்குகிறான்!

ஆகவேதான், அரசனை ஒதுக்கிவிட்டு நீதிகள் எழுவதில்லை!

புராணக் காலத்தில், பரசுராமன் (சமதக்கினி முனிவர் மகன்), கேரளாவில், வடக்கேயிருந்து குடிகளைக் கொண்டு வந்து, அமர்த்தினான் எனப் படிக்கின்றோம்.

மெக்கன்சியின் ஆவணங்களில், "இன்ன அரசன், காடு வெட்டி, ஊர் உண்டாக்கினான்; அங்கு இன்ன குடிகளை அமர்த்தினான்" என்று பல இடங்களில் பேசப்படுகின்றது.

எனவே, அரசன் சமுதாயத்தின் காரணக்கூறாக இருப்பதால், நீதி பகரும் போது, புலவர்களும் அரசநீதியைக் கூறத்தவறுவ தில்லை!

மேல் 120க்குக் கணக்கு - 10+26+10+74=120

## Nature of Moral

| | |
|---|---|
| *Consolidation, classification and exposition of morality in stanzas* | 16 |
| Consolidation, classification and exposition of immorality in stanzas | 6 |
| *Codes for king, kingship and the* Learned in stadzas | 14 |
| On morality in stanzas | 9 |
| *On immorality in stanzas* | 5 |
| General codes in stanzas | 10 |
| On body characteristics in stanzas | 14 |
| In toto, the characterics of morality in stanzas | 74 |
| In toto, for the 2 types, the stanzas | 120 |

### Exposition

Morality for Kings noted above is conspicuous.

Tamil adage, "The whole world is only after the king!" may be *recalled here*.

"Like Kings, so the *people*" — This saying of Tamils also must be remembered at this juncture.

When analysing the ethical pieces in Tamil, one can hit upon the ideā that without mentioning the preaching for kings *no ethical* literature has been composed.

Not only ethical literature, but *also in* all other genres of Tamil, note around kings will be available without fail.

What is the reason?

In a way, we can say that, in fact, only kings create a community in a particular place.

That is why, no ethical piece is possible without a note about kings.

In days of yore, **Parasurama** (son of Jamadakkini), caused to settle multitude of families, brought from North, in Kerala, we read.

In many of the **Mackenzie Manuscripts**, time and again, we come across descriptions as to a particular king clearead out the jungle and caused the people to settle".

That is why, since King is a part and parcel of society, ethical literati never forget to mention rules for ruling etc.

Account for the 120 stanzas :- (10 + 26 + 10 + 74 = 120).

# 1

## கடவுள் வணக்கம் - கவி

### [உனது இருபதம் !]

அறிவாகி அலகில் உயிர்தொறு நிறைந்து
நீதியது பேதமும் பேத
முறையான வேதத்தின் முடிவெல்லா மறிந்து
நாற்குணா குணபே தங்கள்
குறியாகத் தெளிந்துண்மை குறித்தோர்தம் உளத்தும்
அவர்புறத் துமுறை நின்ற
நெறியாகும் ஒருவன் இருபதம் எனது
சிரத்துமருள் உளத்துநிலை யாமே!

/பொருட் குறிப்பு]

[அலகில் - அளவில்லாத
பேதம் - வேற்றுமை
வேதம் - இருக்கு, யசுர், சாம, அதர்வண வேதங்கள்
குணாகுண = குண + குண
புறத்துமுற - வெளியே படியவும்
இருபதம் - இரு பாதங்கள்
சிரத்தும் - தலையிலும்
சிரத்துமருள் = சிரத்தும்+அருள்]

### விளக்கம்

"எனது சிந்தையில் வேதமுடிவறிந்த இறைவன் நிலையாவான்! எப்படிப்பட்ட இறைவன்? அறிவு வடிவானவன்! எல்லா உயிர்களிலும் ஊடுருவியுள்ளவன்! நீதிகளின் தன்மைகளை நன்கு அறிந்தவன்! உண்மை தெரிந்தோர் உளத்தில் நிறைந்தவன்!" என்பது இக்கடவுள் வணக்கத்தின் கருவாகும்.

# 1

## Invocation - Stanza - 1

## Your twin feet!

I perpetuate His feet
In my heart and on my crest!
Who Himself being knowledge
Residing in all *souls*
Understanding the disparities of Morals
*And*
*Filling* the hearts of the Truth-known!

### Terms expounded

[alahil - unlimit*ed*
betam - *difference*
Vedam - Rik, Yajur, Sāma and Atharvaṇa
guṇāguṇa = guṇa+guṇa
purattumura - embracing outside
*irupatam - 2 feet*
cirattum - on head too
cirattumaruḷ = cirattum+aruḷ]

### Exposition

"God, who knows the end of Vedas, will remain in my mind! Want to know His qualities? He is the incarnation *of* knowledge! He is omnipresent! He knows the end of *moralities!* He settles at the hearts of truthful persons!"

This *is the* epitome of the stanza.

# 2

## பலச்சுருதி - கவி 1

## [நன்மை தரும் !]

நன்மைதரும் உண்மைதனைத் தொடராருக்
இன்பநல முழுதில்லை யென்றாம்
நன்மைதரும் உண்மைதனைத் தொடர்வாருக்
கின்பநல முண்டென்ப தென்னோ
நன்மைதரும் புருடார்த்த மிதுவாகும்
புத்தியொடு முத்தியுமே நல்கும் !
நன்மைநம்க் குறநல்கும் சுவாமி
காரியமா மிரர்சியமு மிதுவே !

### பொருட் குறிப்பு

[தொடர்வாருக்கின்ப நலம் =
தொடர்வாருக்கு + இன்பநலம்
புருடார்த்தம் - உறுதிப் பொருள்;
அறம், பொருள், இன்பம், வீடு ஆகியன.
முத்தி - மோட்சம்
இராசியம் - மறைபொருள்]

### விளக்கம்

இந்த நூலைப் படிப்பதால் என்ன நன்மை?
இதைக் கூறுவதே பலச்சுருதி!
பலனைத் தெரிவிப்பது பலச்சுருதி!
என்ன நன்மைகளாம்?
நன்மை தரும்! புத்தி தரும்! முத்தி தரும்!

இங்கு கூறப்பட்டுள்ளவற்றில், முத்தி என்பது விரிந்த ஆய்வுக் குரிய தலைப்பு!

தமிழில் முத்தி என்பது தனியாக ஆயத்தக்க ஓர் ஆய்வுத் தலைப்பு. இதுவரை இவ்வாய்வு மேற்கொள்ளப்படவில்லை.

வாழ்க்கையின் ஒவ்வொரு கூறும் முத்தித் தத்துவத்தோடு இணைக்கப்பட்டுள்ளது!

*இராமாயணம் படித்தால் முத்தி கிடைக்கும்!*
*அல்லி அரசாணி மாலை கேட்டால் முத்தி கிடைக்கும்!*
*சிற்பச்சாத்திரம் படித்தால் முத்தி கிடைக்கும்!*

இப்படி எதையெடுத்தாலும் "முத்தி கிடைக்கும்" என்று கூறி வைத்துள்ளனர்!

ஒரு காலத்தில், 'மோட்சம்' அடைந்தவர்கள் 'மேலே' சுகமாக இருக்கிறார்கள் என்று கூறிவந்தார்கள்! ஆனால், மனிதன் நிலவுக்குப் போய் அங்கு ஒருவரும் இல்லை என்று அறிவித்த இவ்வேளையில் அவர்கள் என்ன சொல்வார்களோ?

## 2

### Outcome of this book - stanza - 1

### Showers benefits!

This treatse
Will render benefitis!
Those who do not follow
Such truths are hollow!
This will fetch definitely
The four-fold aims of man!
Along with Knowledge and Emancipation!
This is the point here recondite!

**Terms expounded**

(todervārukkinbānalam = todarvārukku + inbanalam

purushārttam - Beneficence, Worldly substance,
Happiness and Future bliss
mutti - emancipation
irāciyam - recondite truth]

**Exposition**

What is the use of reading this piece?
To tell the result is nothing but 'Aim of the book'.
What are the uses?
Will shower benefits!
Will render Knowledge!
Will accord salvation!

The point noted here, 'salvation' needs a broad research.

"Salvation in Tamil" is a separate research topic. Such a study has not yet been undertaken so far!

Each and every aspect of Tamils' life has been linked with mōkshā!

One will get mōkshā if he reads Rāmāyaṇā.
Will receive mōkshā if he reads Alli arasāṇi mālai!
Will obtain mōkshā, if he reads Silpa sastra!
Likewise, if he reads anything he will get mōkshā!

In days of yore, the folk thought that those attained mōkshā do reside up above in the sky!

But what will say now when scientists had declared that no body was present in moon?

# 3

## அவையடக்கம் - கவி 1

## மணியைத் தாங்கிய சிறு தோல்

*சிலமகுடச் சூடா மணியினையோர்*
சிறுதோலிற் செறிந்து வைத்திடினும்
தோலினது குற்றமொன்றும் பாரார்கள்
தூயமணியைக் கொள்வர் அதுபோலும்
மேலவுமே கனநயங்கள் இல்லாத
என்சொல்லின் சுமைதனை ஓரார்!
ஞாலமிசை கொள்வார்கள் இந்நூலிலின்
உண்மைநலம் நல்லோர்கள் அன்றே!

### பொருட் குறிப்பு

[கனநயங்கள் - சிறந்த நயங்கள்
சுமை - குற்றம்
ஓரார் - ஆயமாட்டார்
ஞாலம் - உலகம்]

### விளக்கம்

நல்ல அவையுடக்கம் இது!

"நல்ல மணிகளை, ஒரு சிறு தோற் பையில் போட்டு வைக்கின்றனர்! தோல் மட்டமானதுதான்! அதற்காக, மணிகளும் மட்டமாக ஆகிவிடுமா?

அதுபோல, எனது எழுத்து, மட்டமானதுதான்! ஆனால் அதில் உள்ள நீதிகளையே நல்லவர்கள் பார்ப்பார்கள்! குற்றத்தைப் பெரிதாக எடுத்துக்கொள்ள மாட்டார்கள்!"

தமிழில் அவையடக்கப் பாடல்கள் என்றே தனியான ஆய்வு நூல் ஒன்று வெளிவந்துள்ளது (குண்ணப்பன் பதிப்பகம்,

10, கண்ணதாசன் சாலை, பாண்டிபஜார், தி.நகர், சென்னை-600 017, தொ. பே. 8544740) இவண் குறிப்பிடத்தக்கது.

தமிழில் உள்ள அவையடக்கப் பாடல்கள் மட்டுமே, தமிழின் சிறப்பைப் புகலப் போதுமான சான்றாம்! அந்த அளவிற்கு இனிமை ததும்பும் உவமைகளைக் கொண்டது அவையடக்கப் பாடல்கள்!

# 3

## Professed Modesty - Stanza - 1

## A Small leather bag holding gems !

What if gems are kept
Inside a worthless leather bag ?
Nobody will hide the bag ?
Everybody will laud the gems !
People will appreciate the truths only
Of my treatise not so nice !

### Terms expounded

[kaṉa nayankaḷ - elegent subtlities
kamai - mistake
ōrār - will not find out
gñālam - world]

### Exposition

A nice confessed modesty here!

"People have put lustrous gems in a small worthless leather bag! But, because of this will the value of the gems be lost? No!

On the contrary, scholars will only appreciate the validity of the morality expounded in my book! They won't pick up holes!

Stanzas of Confessed Modesty in Tamil have been researched in detail already (Kannappan Patippakam, 10, Kannadasan salai, T.Nagar, Chennai-600017, Ph. 8544740)

The stanzas of Confessed Modesty alone, in Tamil, is an ample evidence to prove the loftiness of Tamil! Innumerable similes have been imbibed in them!

## 4

### நூல் வரலாறும் நூற்பெயரும் உரைக்கின்றது - கவி 1

### நவநீதத்திரட்டு!

*நீதிமனு நூலென்னும் பாற்கடலில்*
*நவநீதந் திரட்டி நெறியறியும்*
*நீதிநூல் களுக்கெல்லாம் இலக்கணமாம்*
*அச்செனவும் நேர்பெறவே நிரைத்துச்*
*சாதுவாம் மனித ரியல்பொடு*
*நீதியியல்பெனவே தரும மிரண்டதாக்கி*
*நீதிச்சாரத்தின்* **அனுபவத் திரட்டென்று**
ஒருபேரினில் *நிறைந்த தருட்படியே !*

பொருட் குறிப்பு

*[நீதி மனு நூல் - மனு நீதி நூல்; மனுசுமிருதி*
*நவநீதம் - புதுவெண்ணெய்*
*அச்சென - ஆதாரமென*
*ஒரு பேரினில் - என்ற ஒரு பெயரில்]*

**விளக்கம்**

"மனுநீதி எனப்படும், மனுசுமிருதியை ஆதாரமாகக் கொண்ட நூல் இது!

மனிதரியல்பு, நீதியியல்பு என்ற இருபிரிவுகளை உடையது!

**நீதிச்சார அனுபவத் திரட்டு** என்ற பெயரில் இலங்குவது!

பாற்கடலிலிருந்து எடுக்கப்பட்ட புதுவெண்ணெய் போன்று, மனுசுமிருதியிலிருந்து எடுக்கப்பட்ட புதுநூல் இது!

# 4

## History of the treatise and the

## Name of the treatise - Stanza - 1

## Consolidating the butter !

Ours is a compendium
Of the 'butter' from the milk
Called Manusmrti a mammoth didactic piece !
This classified has been
Into two-Men and Morality !
This crowned has been
With a title, 'A compendium
Of the Solidity of Morals !'

**Terms expounded**

[nīti manu nul - Manusmrti
navanītam - fresh butter
accene - as a base
oruperinil - in that name]

**Exposition**

"This is based on the work *Manusmrti*!

Its aim is twofold; one explaining the nature of man and the other, elucidating the characteristics of morality.

This has been knitted under the title, 'A compendium of the consolidation of Morals.'

Just like a fresh butter from a sea of milk, this is a fresh piece culled out from *Manusmrti*!"

## 5

நூல் கற்கு மியல்பும் கற்பிக்கு மியல்பும்

உரைக்கின்றது - கவி - 3

**தமக்கெனத் தோன்றிலர்!**

சிலர் புதுநா லென்றும் பழைய
தென்றும் பாரார்கள்
நலமே தெரிவார்!
சிலர் தெளிவினர் இதுவே
துணிபொரு ளாமெனப்
பொருள்செப்பத் தெளிந்துநலங் கொள்வார்!
சிலர் புதிதெனக் கவிழ்த்துப்
பழைமைதனைப் பார்ப்பார்கள்
பொருளுடைமை தெரியார்!
சிலர் ஏத்தியும் இகழும்
இருவருக்கும் உடன்படுவர்
தமக்கெனத் தோன்றிலரே!

## பொருட் குறிப்பு

[நலமே தெரிவார் - சிறந்தவற்றையே
தேர்ந்தெடுப்பார்
கவிழ்த்து - இழித்து
ஏத்தியும் - புகழ்ந்தும்]

### விளக்கம்

இப் பாடலில் 'சிலர்கள்' என்று சுவடியில் வந்துள்ள முதற் சீர்கள் நான்கும், 'சிலர்' என்று பதிப்பாசிரியரால் திருத்தப் பட்டுள.

'சிலர்கள்' என்ற சுவடிப்பாடத்தில் 'கள்' விகுதி தேவை யற்றது.

சிலர், பலர் என்பனவே பன்மை வடிவங்கள்தாம்! இவற்றின் பின் சிலர்கள், பலர்கள் என்று எழுதுவது முற்றிலும் தவிர்க்கப் படவேண்டியனவே!

'செய்யுளில் வரலாம்' என்று அனுமதிக்கலாமா?

இயலாது!

செய்யுளில் ஓசைக்காகச் சில சொல் மரபுகள் உருமாறி வரல் உண்டுதான்! இருப்பினும் முற்றிலும் தேவையற்ற வடிவங் களைச் செய்யுளில் எதற்காகவும் பயன்படுத்துவது நல்லதல்ல! பிழையானது!

ஓலைச் சுவடியில் உள்ளதை மாற்றக் கூடாது! எனினும் 'சிலர்கள்' என்ற பாடம் அப்படியே கொள்ளப்பட்டால் தவறான மொழிப் போக்கு ஏற்பட வழி வகுக்கும்!

மேற்பாடலில் வந்துள்ள நீதி உன்னத்தக்கது!

இப்பாடலில் கேலியும் கிண்டலும்கூட உளது!

சிலர், "நல்லது கெட்டது இரண்டையுமே ஆதரித்துத், தமக்கென்ற ஒரு கொள்கையும் இல்லாதவர்களாக உளர்" என்ற கருத்து பாடலின் ஈற்றில் புகலப்பட்டுளது நல்ல நீதி!

அறிவியலாளர்களுக்கும் இலக்கியவாதிகளுக்கும் ஒரு வேறுபாடு உளது!

அறிவியலாளர்கள், தூய அறிவியல் என்ற அடிப்படையில், தான் கண்டுபிடிப்பது சமுதாயத்திற்குக் கேடுபயக்கும் என்றாலும் கண்டுபிடிப்பை அச்சமின்றி மேற்கொள்வார்கள்! வெளியிடுவார்கள்!

ஆனால், இலக்கிய அணியினர், சமுதாயத்திற்கு அஞ்சி அஞ்சிச் சாகவேண்டும்! சமுதாய நினைப்பு இல்லாமல் இலக்கிய ஆசிரியன் படைக்க நினைப்பது இயலாத செயலே.

மேற்பாடலில் இத்தகு கருத்தே அடிச்சட்டமாக உள்ளது.

# 5

## Manner of Learning Books and Mode of Teaching Revealed - Stanzas - 3

### They don't know on their own!

A few
Will only look for the best!
Who never mind - old or new!
A few
Will appreciate having understood the truth
After our explanation due!
A few
Will not understand the truth
Who won't land the new, looking for the antique!
A few
Will nod their heads for sides both
Who don't know the right on their own!

### Terms Expounded

[nalamē terivār - will select always the best
kavi͟ittu - looking down upon]
ēttiyum - *landing*]

### Exposition

The term 'cilarkaḷ' needs discussion.

Here, 'kaḷ', a plural suffix given in leaf is unnecessary.

The words cilar and palar are themselves plural forms; so further attachment of suffixes are to be despised.

Is it a poetic license to allow such a word ?

Not at all!

It is true that for euphony sake, some change is allowed in poems; but, quite unnecessary usage like this can not be admitted! Quite wrong!

Though we can not alter the palm leaf text; the word cilarkal has been rendered as only as cilar to save the Tamil traditional flow.

The ethics envisaged in the above stanza needs contemplation.

Nice satire has been imbibed in this stanza.

The moral wielded in the end of the stanza—"A few, having no opinion on their own, appreciate both sides, for and against !"—is a nice whip!

There is a general difference between the literateurs and the scientists; the former can not ignore society while the latter can well do.

Without a fear of comment, a scientist can proceed with his job, whilst an author of a literary piece must take into account what people around him opine about his endeavour.

This is the tenor of the above stanza.

## 6

### கதலித் தண்டு

அறிவினர் தமுளம் பகல்போ லிருக்கும்
அறிவிலர் உளந்தான் இருள்போ லிருக்கும்!
அறிவினர் நூல்தொகை வகையிற் கற்பிக்க
கற்பரும் நால்வகை யாகக் கற்பர்!
அறிவினர் இருந்தையினும் விறகினும் தீய
ணைவ தெனஉற் றறிவார் மற்றை
அறிவிலர் பச்சை விறகினும்
கதலித் தண்டென அறிவார்க ளன்றே!

(2)

பொருட்குறிப்பு

[தமுளம் - தம் + உள்ளம்; தொகுத்தல் விகாரம்
இருந்தை - கரி
தண்டென - தண்டெனவும்; ஈற்று
உம்மை செய்யுளிசை
நோக்கித் தொக்கது]

விளக்கம்

அறிவுள்ளவர்களின் உள்ளம் வெளிச்சமாக இருக்கும்!

அறிவற்றவர்களின் உள்ளமோ இருளடைந்து காணப்படும்!

அறிவுள்ளவர்கள், கற்பிக்கும் போது, வகை, தொகை செய்து, தொகுத்தும் வகுத்தும், வகைப்படுத்தியும் ஒருங்கு சேர்த்தும் கற்றுத் தருவர்.

கற்பவர்களில் நான்கு வகைகள் உள்ளன!

1. கரிபோல் கற்றல்
2. விறகுபோல் கற்றல்
3. பச்சை விறகு போலக் கற்றல்
4. கதலித் தண்டு போலக் கற்றல்.

அஃதாவது, கரியானது, சிறிது நெருப்பில் பற்றிக் கொள்ளும்.

காய்ந்த விறகானது, நெருப்பு வைத்துச் சிறிது ஊதிப் பிறகு கனிவு பெற்ற பின் பற்றும்.

பச்சை விறகானது, நெருப்பை வைத்துத், துன்புற்று ஊதி, பிறகு விறகை உலர்த்தி, இவ்வளவும் செய்த பிறகு ஒருவேளை பற்றும்!

ஆனால், கதலித் தண்டோ என்ன முயன்றாலும் பற்றவே பற்றாது!

மேல்வந்த நீதியானது, முன்பே பல நூற்களில் கூறப் பட்டவையே!

# 6

## Internal Spadix of a Plantain Tree !

The learned possess hearts so bright !
While that of air-headed, so dark !
The learned teach rendering classifications !
While the learners fall into divisions four !
First rank learners are those
Who do quickly as charcoal catches fire !
Second rank learners are those
Who do slowly a little bit
Like a firewood bit by bit !

But pity is the state of dolts
Who never learn like a firewood so wet
And like an internal spadix of plantain tree!

**Terms Expounded**

[tamuḷam = tam + uḷḷam;
Loss of particle due to assemblage.
iruntai - charcoal
taṇdena - for taṇdenavum;
Last particle 'um' absent for prosody.]

**Exposition**

The hearts of the learned are bright!

But those of the air-headed, only dark!

The true teachers will only teach the pupils having bifurcated the subject into suitable divisions!

Among the students, there are four kinds! :-

1. Like charcoal
2. Like firewood
3. Like wet firewood
4. Like the internal spadix of a plantain tree.

To wit, charcoal catches fire on ignition, quickly.

The dry firewood catches fire only on little blowing.

The wet firewood will catch fire seldom with much dificulty.

But the internal spadix of a plantain tree will never catch fire at all!

The above similes and morals are wellknown to Tamils already.

# 7

## கடல்போலக் கல்வி வேண்டுமா ?

உடன்தனில் பிணியணுகா வகைநீக்கி
மந்தமா முண்டியுமே நீக்கிப்
படிறுசினந் துயிநீக்கிப் பருதிவரு
முனமைந்து நாழிகையி லெழுந்து
முடிவுநிறை கல்வியருண் நிறையாசான்
தனையணுகி முற்றமுயல் வோர்க்குக்
கடல்போலுங் கல்விவருங்! கருத்தில்லா
தவர்களுநற் கருத்தினரா வாரே !

(3)

### பொருட்குறிப்பு

[பிணி . நோய்
உண்டி - உணவு
பருதி - ஞாயிறு
படிறு - பொய்
துயில் - தூக்கம்
துயிநீக்கி - தொகுத்தல் விகாரம்
நாழிகை - 24 நிமிட நேரம்]

### விளக்கம்

கடல் போல உங்களுக்குக் கல்வி வேண்டுமா? ஆசிரியர் தரும் உத்திகள் :-

1. நோய் வராமல் பாதுகாத்துக் கொள்ளுங்கள்!
2. பெருந்தீனியை நிறுத்துங்கள்!
3. பொய் பேசாதீர்கள்!
4. கோபத்தை ஒழியுங்கள்!
5. சூரியன் உதிப்பதற்கு 5 நாழிகை முன்பே எழுந்து விடுங்கள்!

6. நன்கு கற்ற ஆசிரியரை அணுகிக் கற்றுக் கொள்ளுங்கள்!

கல்வியாளர்களின் சிந்தனைக்கு விருந்தான பாடல் இது!

நல்ல உடல்திறம் இருந்தால்தான், ஒருவரால் கற்க முடியும்! ஏனெனில், தொடர்ந்து பாடுபட்டால்தான் எதையும் அறிந்து கொள்ளமுடியும்! உடல்நோவால் அவதிப்படும் ஒருவரால் தொடர்ந்து பாடுபட இயலாது!

மேற்பாடலில், படிறு நீக்குக என்ற நீதி, சிறந்த நீதி!

ஆம்!

பொய் கூறும் ஒருவரது நெஞ்சத்தில் உண்மைக்கல்வி ஏறாது! ஏறினாலும் அதனால் பயன்தான் என்ன?

வயிறுநிறையத் தீனி இன்பவனது உடலில், அவ்வுணவைச் செரிப்பதற்கான பணியே நடக்கும்! சிந்தை பணி புரியாது! சிந்தை மந்தமானால், கல்வி ஏறாது!

இவ்வாறு பல வழிகளில், இப் பா சிறந்தவொரு நீதிப் பாவாகவே உளது!

# 7

## Want an immeasurable education?

Keeping a robust physique
Eschewing gluttony
Execrating falsehood
Avoiding anger
Awaking before sunrise five *nālis*
Accosting to the true learned
One can attain education

As vast as ocean !
In this way one can
Accord education, though he is ordinary !
(3)

**Terms explained**

[piṇi - disease
uṇdi - food
paruti - sun
tuyil - sleep
tuyinikki - jumping of particle due to assemblage
nāḻikai - 25 minutes]

**Exposition**

Are you planning to acquire an education as vast as sea! Here are the tips:-

1. Keep your body in good health
2. Avoid sumptuous food
3. Don't speak lie.
4. Get up 2 hours before sunrise.
5- Approach a good teacher.

These precepts are a feast to educationists.

Good physique [is a must for learners. Continuous strain is a must for learning anything solidly.

Preaching to detest lies in life is a good moral, really, especially in this context.

Yes!

What is the use of a person becoming a great educationiat if he is a rogue?

*For glutton, his body energy will be consumed only to digest his food! So, naturally, has mind will become mopish.*

In this way, the above stanza is a touching one.

## 8

### இந்நூலைக் கற்பவருக்குப் பயன் கூறுகிறது - கவி - 1

### நூற்கரு தோன்றுமே !

*முன்னவர்சொ னூற்கரு வெல்லாந் தோன்று*
*முறைவிவகா ரக்கருவுந் தோன்று*
*மன்னவர்செங் கோற்கரு வுமமைச்சு முதற்றன்*
*அறிவின்மதிக் கருவுந் தோன்று*
*மன்னிவரு முபாய தந்திர வுத்தி*
*சீவனா சீவனத்தின் வகையும்*
*நன்னிதி சாதனா சாதனமுந் தோன்றும்*
*இந்நூல் நவிலுவோர்க்கே !*

பொருட் குறிப்பு

*[செங்கோல்+கரு = செங்கோற்கரு*
*முதல்+தன் = முதற்றன்]*

விளக்கம்

நீதிச்சார அனுபவத் திரட்டு — இந்நூலைப் படிப்பதால் யாது பயன்?

கேட்பீர்கள் அல்லவா?

அதற்கு விடை கூறுகிறார் ஆசிரியர் நாகைச் சத்திய ஞானி!

முன்னே வாழ்ந்த புலவர்களின் நீதிக் கருத்துகளைத் தெரிந்து கொள்ளலாம்!

மன்னவன், அவனின் செங்கோல், அவனுக்கு வாய்க்கும் அமைச்சன், அவன் பண்புகள், பல்வேறு உத்திகள், தந்திரங்கள் என்று இப்படிப் பல நுணுக்கங்களை இந்த நூல் மூலம் ஒருவர் அறிந்துகொள்ளலாம் என்கிறார் ஆசிரியர் !

# 8

## Renders utility for those who learn in stanza - I

## Essence of old books will be obtained !

The learners of this treatise
Will accord the essence of books
Of poets in the yore
They will attain clear knowledge
About kings, ministers and sceptre !
They will accord ample knowlege, so sharp !
And technique of sorts all !
They will attain wealth
In addition to other means !

### Terms expounded

[cenkōl + karu = cenkōrkaru
mutal + tan = mutaṭran]

### Exposition

What is the use of reading this 'Compendium of the solidity of morals' ?

You may well ask!

The poet Satya Jnani of Nagappaṭṭiṉām answers this!

You can well glean the poets' view of the past centuries.

King, his sreptre, minister, his traits, life's various techniques and stratagies etc can well be grasped by reading this didactic piece.

## 9

### நூற்பயனைத் தொகுத்துரைக்கின்றது கவி 2

### ஆணுக்கும் பெண்ணுக்கும் நீதி!

*நீதிமான் முதலாக நால்வரையுமிந்*
*நூலினில் நிகழ்த்தி வருமிதனை*
*நீதிநெறி கற்றோர்கள் பெண்புருட*
*சாத்திரத்தில் நிலைக்கவே சொன்னார்*
*நீதிநின்ற பாஞ்சாலப் புருடன்*
*பத்திரசேனன் தன்நற் குமரர்*
*நீதிநெறி சிலகற்ற வசுகுமரன்*
*இவர்க்கடுத்த பெண்பாலு மன்றே!*

பொருட்குறிப்பு

*[பாஞ்சால அரசன் பத்திரசேனன்*
*குமரர் - தருமன்*
*வசு - வசிட்டர்*
*பெண்பால் - அருந்ததி]*

**விளக்கம்**

*"இந்நீதிநூலில் ஆண்பால் பெண்பால் இருபாலார்க்கும் நீதி புகலப்பட்டுள்ளது. நீதி புகன்றவர்களும் அங்ஙனம் நவின்றுளர்;*

*நீதிக்காக நாம் எடுத்துக்காட்டக் கூடிய ஆண் - தருமன். பெண் - அருந்தி என ஆகிறன்றோ?"*

# 9

## Consolidation of the utility of the book - stanzas 2

## Ethics for Man and Woman !

Preceptors in times ancient
Had preeched precepts for man and woman!
In the crena of mordity
There stands a man - Dharma
Who is the son of Bhatrasēnā
And
There stands a woman - Arundhadhi
Who is the spouse of Vashisṭā

### Terms expounded

[Pāñjāle king Bhatrasena's son - Dharma
Vasu - Vashista
penbāl - Arundhati]

### Exposition

"Herein are rendered the ethics for both man and woman. Ancients have also uttered in the same line.

Dharma and Arundhati had set models for justness in life"

# 10

## இதுவுமது

## நீதி, அநீதி எது?

அறிவினர் குணமிதுவாம் பகடின்குணம்
சலத்தின்குணம் அடையாக் குணமிதுவாம்!

*அறிவினர் முதனால்வர் அடையும்*
*விதமிது வாமென உலகில்யாரும்*
*அறியவரு நீதியுட குணமிதுவா*
*அநீதிக் குணமிது வாமென*
*அறியவே வெளியாக்கி அனுசரிப்ப(து)*
*அனுசரியா திரண்டு மறைகுதுமே!*

பாயிர முற்றும்.

பொருட்குறிப்பு

*[பகடு - ஓடம்;*
*சலம் - நீர்.]*

**விளக்கம்**

*"ஓடமானது, நீரில் இருப்பினும், நீரின் குணத்தை அடையாது! அதற்கென்று உள்ள நற்குணத்தை ஓடம் இழக்காது!*

*அதுபோல, அறிவினரும் யாண்டும் நற்குணத்தோடு திகழ்வர்!*

*இந்நூலில், அனுசரிக்கும் நீதி எது, போக்கவல்ல முறைகள் யாவை என்று விளக்கப்படும்!"*

## 10

**Continuation**

## What is justness? What is injustice?

The wise will have a path to be a boat
A boat will acquire the water's trait never!
The will will have their own ethics ever!
My aim is to furnish
what is justice and injustice what is?

Prologue ended.

### Terms expounded

pahaṭu - boat
calam - wateiſ

### Exposition

"The boat will have lose its identity; it will never acquire the qualities of water. In the same manner, the virtuous people will never lose their good qualities and and righteousness.

I will expose here what is justice and what is injustice."

## 11

மனிதரியல்பு
நால்வகை மனிதர் குணாகுணமுஞ்
சொல்லுஞ் செய்கையு முரைக்கின்றது - கவி - 26

### புசிப்பு, போகம் ஒக்கும்

*அறிவன் சித்தன் எல்லாம் ஒன்றினால்*
*வகையுண்டாம் அதன் விவரம் அதிலே*
*மறைபுரியும் மனிதருக்குப் பிறப்பிறப்புப் புசிப்புப்*
*போகங்கள் ஒக்கும் எனினும்*
*குறியறியும் குணத்தாலே நால்வகை உண்டென*
*உரைத்தார் குறிக்கோள் நன்மேலோர்*
*முறையிதனை அறிந்தவர்க்கே கரும நன்றாம்*
*அறியார்க்குப் பிசகுமாம் கருமம் !*

பொருட்குறிப்பு

*[மறை - வேதம்*
*பிறப்பிறப்பு = பிறப்பு + இறப்பு*

புசிப்பு - துய்ப்பு
கருமம் - செயல்]

**விளக்கம்**

"வேதம் வல்லோர்க்குப் பிறப்பு, இறப்பு, துய்ப்பு, துன்பம் இவையாவும் ஒன்றே! எல்லாம் வேறுபாடற்றவையே!

ஆனால், பொதுமனிதனுக்கு, நால்வகை மனிதர்களை அறிய வேண்டியது அவசியமே!

இந்தப் பாகுபாடுகளை நன்கு அறிந்தால்தான், எந்தச் செயலையும் செய்து முடிக்கலாம்; இல்லையேல், எடுத்த செயல் பழுதாகும்!"

## 11

**Human nature**
**The Characteristics of the four kinds of people revealed - stanzas 26**

## Revelry, enjoyment same!

For the men with Vedic lore
Birth as well as Death
Enjoyment as well as revelry
Are all equal as well!
But for men of common lore
The understanding of divisions four
Is a must for deeds execution!
Lest
His deeds will attain a no go!

**Terms expounded**

[marai - vēdas
pirappirappu = pirappu + irappu

pucippu - enjoyment
karumam - deed]

**Exposition**

"For those who have mastered the Vedas, everything is equal-birth, death, revelry and distress!

But for a man of ordinary strength of mind, the knowing of four varieties of people is essential.

If only, he understands these four, he can execute his deeds without fail!"

## 12

### தந்தை - தாய் காரணம்!

தந்தை யொத்த குணத்தின ராகத்
தழுவின குணமாகும் தனயன்
தந்தைதாய் இருவருமே உயர்வு தாழ்வெனுங்
குணத்த ராகவே தழுவின
தந்தைகுண மல்லது தன் தாய் குணமும்
பொருந்துமிதில் உயர்வும் தாழ்வும்
முந்து குணம்பூ ரிக்கு நீதிதனிற்
குணமில கீழ்முகரும் அநீதி!

(2)

பொருட் குறிப்பு

[தனயன் - மகன்
பொருந்துமிதில் = பொருந்தும் + இதில்
பூரிக்கும் - மேலோங்கும்
முகரும் - அவாவும்]

**விளக்கம்**

"மகனின் குணமானது தந்தையின் குணத்தைப் பெரும்பாலும் ஒத்துக் காணப்படும் என்பது உண்மையே!

ஆயினும், தந்தை-தாய் இருவரின் குணங்களுமே, ஒரு மகனுக்கு இருக்கும்!

தந்தைதாய் குணங்களில் நற்குணம் மேலோங்கி நின்றால், அவன் நீதிமானாவான்! தீக்குணம் மேலோங்கி நின்றால், அவன் அநீதி இழைப்பவனாவான்!"

இதுவே மேற்பாடலின் திரள் கருத்து.

இப்பாடலில் ஆசிரியர் மிக அரிய உளவியல் தத்துவத்தைப் புகன்றுள்ளார்!

ஒரு மகனின் குணம், தந்தையால் மட்டும் தீர்மானிக்கப்படுவதில்லை! தாயாலும் தீர்மானிக்கப்படுகிறது என்பது ஆழ்ந்த உளவியற் பேருண்மை ஆகும்!

"தக்கார் தகவிலர்"* எனத் தொடங்கும் வள்ளுவக் கருத்து இங்கு ஒப்பிடத் தகுந்தது.

மேற்பாடலில் மகன் என விதந்து ஓதினாலும், மகளுக்கும் இதே கருத்தானது பொருந்தும் எனலாம்.

# 12

## Father and Mother are responsible

Doubtless, son is like his Father!
But,
Responsible are both Father and Mother!
Son accords the character blatant
From Father as well as Mother!
In the combination, if predominates Justice
He will become Just!
If predominates Injustice
He will become Injust!

**Terms expounded**

[tanayaṉ - son
poruntumitil = poruntum + itil
pūrikkum - surface above
mukarum - embrace]

**Exposition**

"It is true that a son's or daughter's characters largely depend on their father's.

But, it is not the whole phenomenon!

*Both father and mother are equally contribute their traits in rendering the character for their word.*

In the parents' morality, if ethics predominates, their issue accord the justness; if evil trait is blatant, their word's morality will also fāll down!"

This is the author's psychological analysis! — a conspicuous analysis!

This is a fine explanation for Valluvar's couplet, "Thakkār thakavilar . . . . ".

In our stanza, though only a 'son' is indicated, it may well denote also a 'daughter'.

# 13

**விகடமே கொள்வர் !**

*அறிவினர் பெருக்கத்தாற் பலத்து நிற்கின்*
*மற்றவர்கள் அச்செயலுக் கடங்கும்!*
*அறிவினர் இளைத்து நிற்கின் மற்றவரும்*
*அவர்செயலும் பலமுறவே நிற்கும்!*

அறிவினர் தாழ்ந்த குணத்தினர் தம்மையும்
தழுவியே கொள்வார்கள், தள்ளார்!
அறிவிலர் தழுவுவரோ? தழுவார் கள்பல
விதத்தால் விகடமே கொள்வார்!

(3)

## பொருட்குறிப்பு

விகடம் - நகைப்பு

## விளக்கம்

"அறிவு உள்ள அறிவாளிகள் பலராகத் திரண்டு தங்கள் கருத்துகளை உரைக்கும் போது, மற்றவர்கள் அவர்களுக்கு அடங்குவார்கள் !

ஆனால், என்னதான் அறிவாளியாக இருந்தாலும் ஒருவராக நின்று சொல்லிக் கொண்டிருந்தால், அவர் கருத்து ஏலாது !

அறிவாளிகள், குணத்திற் குறைந்தோர்களை விலக்கித் தள்ள மாட்டார்கள் ! அவர்களையும் அணைத்துச் செல்வர் !

ஆனால், அறிவிலிகளோ, குணம் குறைந்தவர்களை ஒதுக்கு வார்கள்! விளைவு? அறிவிலிகள், நகைப்புக்கு இடம் ஆவார்கள்!"

இவையே புலவர் **நர்கைச் சத்தியஞானி** (கி.பி. 18-ஆம் நூ.ஆ.) அறைந்த கருத்துகள்!

**ஆழ்ந்த மக்களாட்சித் தத்துவம் இப்பாடலில் உளது!**

ஆம்!

என்னதான் அறிவாளியாக நீங்கள் இருந்தாலும், தன்னந் தனியாக நின்றபடி நீங்கள் உரைத்தால், அது பயன்தருமா?

ஆகவே, அறிவாளிகளும் ஒன்றுசேர வேண்டும்! அப்போது தான், அவர்கள் நினைப்பது கைகூடும்! இது சிறந்த மக்களாட்சி முறை அல்லவா? நடைமுறையில் பயனளிப்பதும் இதுவே அல்லவா?

தீப்பண்புகள் உள்ளவரை இகழக் கூடாது என்றும் சாற்று கிறார் புலவர்!

ஆம்!

"இவர் தீயவர்", "அவர் தீயவர்" என்று ஒதுக்கிக் கொண்டே சென்றால் இறுதியில் எவரே மிஞ்சுவர்?

ஆகவே, தீக்குணங்கள் உடையவராக இருந்தாலும் அவருட னும் பழகி, அவரை மேம்படுத்துதல் அறிவாளி கடன் என்று புலவர் சத்தியஞானி நமக்குத் தெரிவிக்கிறார்!

## 13

## Become a laughing stock !

The prodigies,
Though utter a wise idea
Need strength to implement !
If they are not in strength
Set aside will be they !
The enlightened,
Will not execrate the base !
Only those will become a laughing stock
Who despise the people vile ! (3)

### Terms expounded

vikaṭam - laugh at

### Exposition

"The learned, if they want their hold over others, they should show up their strength !

However brilliant he is, if he is done. nobody will care his counselling

The prodigies will not spurn the low !

On the contrary, the unintelligent will become only a laughing stock when they spurn the wicked !"

These are Satya jnani's (18 A.D.) views.

**A** great Democratic Philosoply is here !

Yes !

*Though a prodigy is an intelligent, if he is alone, who will care?*

So, the wise should assemble to muster strength first ! This is a practical truth !

The author says that we should not disdain the wicked

In the judgement our author, the enlightened should encourage to follow the right path rather than dispraising.

## 14

### அறிவினர்க்கு அடையாளம் எது?

அறிவினர்க் கடையாளம் அவர்நாவில்
நீதியது மிகநடனம் பண்ணும்
குறியான கண்டிப்பு முண்மையுமே
பொருந்தவவர் ஒருமைமொழி குறிப்பார்!
முறையறியா மற்றையமு வரைப்போலும்
அகவிக டங்கள் மொழியார் !
நெறியாகும் அடையாளம் இதுவல்லால்
உண்மையது நிறைவின்னும் உண்டே !

### பொருட்குறிப்பு

[நீதியது - 'அது' பகுதிப் பொருள் விகுதி
ஒருமை மொழி - 'ஒன்று மொழி'; சொல் மாறாமை
அகடவிகடம் = அகடம் + விகடம்:
அகடம் - அநீதி
விகடம் - தந்திரம்
அகடவிகடம் - தட்டுமாற்று]

### விளக்கம்

"அறிவாளி இவர்" என்று கூறுவதற்கு அடையாளம் எது? அறிவாளியின் நாவில் நீதி நடனமிடும்!

அறிவாளிகள் ஒன்றே பேசுவர்! நேரத்திற்கு ஏற்றாற்போல உண்மையை வளையார்!

ஏனைய அறிவிலிகள் போல ஏமாற்றுப் பேச்சில், செயலில் அறிவாளிகள் ஈடுபடார்!

அறிவாளிகளுக்கான இந்த அடையாளங்கள் தவிர, இன்னும் எத்தனையோ உள!"

இவையே புலவர்களின் கருத்துகள்.

மேற்பாடலில், ஒருமை மொழி என வந்துள்ளதை, 'ஒன்று மொழிக் கோசர்' என்ற சங்க இலக்கியத் தொடரோடு ஒப்பிடலாம்.

'ஒன்று மொழி' மொழிவதே தமிழர் பண்பாடு!
சொன்ன வாக்கைக் காப்பாற்றுவதற்காக உயிர்துறந்த மக்களும் மன்னர்களும் தமிழ் மண்ணில் ஏராளம்!

பழையனூர் என்ற ஊரில் வாழ்ந்த 70 தமிழ் மக்கள், தாங்கள் சொன்ன வாக்கைக் காப்பாற்றுவதற்காகத் தீயில் விழுந்து உயிர்துறந்த கதை தமிழ் மண் கதைதான்!

## 14

### What is the identification for the enlightened?

On the tongue of the enlightened
Justice will have dance just !
They will have not double-tongues !
They will use not chicanery !
Many more are symbols such
To mark the identity of the prodigies !

(4)

#### Terms explained

[nītiyatu - 'atu' a suffix denoting the stem.
orumai moḻi - pledging one's words.
akaṭavikaṭam = akaṭam + vikaṭam
akaṭam - illogicalness
vikaṭam - trick
akeṭavikaṭam - chicanery]

#### Exposition

"What is the mark to denote that he is an intelligent?
Justness will just dance on his tongue!
Not only that!
The prodigies will speak not with double tongue!
They will keep up their words!
They never indulge in chicanery.
These are the only indications to mark a prodigy?
No!
There are many and many!"
These are the views of the poet.
A thought provoking stanza!

The 'pledging of ones words' used in this stanza may be compared to 'one promise Kōsās' occured in Sangam literature.

Keeping a promise is a pivotal trait in Tamil culture. Many Tamils and kings have sacrified their life just to preserve their pledging!

One may remember here, the sacrifie of 70 Tamils just to keep up their promise given to a businessman at Paḷaiyanūr!

# 15

## பகட்டினர் !

*பகட்டினர் எல்லாந்தான் படித்த வரைப்போலப்*
*பகர்வார்உண் மைநிலைபக ரார் !*
*பகட்டினர் இருளுக்குப் பிச்சுண்டு*
*முயலுக்குக் கொம்பும்உண் டென்பார் !*
*பகட்டினர் ஆகாயப் பூவுண்டு*
*மலடிக்கோர் பிள்ளையுமுண் டென்பர்!*
*பகட்டினர் பகருகின்ற பொய்யினுக்கோர்*
*அளவில்லை மெய்யினுக்குண் டாமே!*

(5)

பொருட்குறிப்பு

[பிச்சு - பித்து

மெய்யினுக்குண்டாமே = மெய்யினுக்கு + உண்டாமே

விளக்கம்

"பகட்டிக்கொண்டு திரிபவர்கள், தங்களைப் படித்தவர்கள் போலக் காட்டிக்கொண்டு, பொய்யுரைப்பர்! உண்மையைப் பேசார்!

அவர்கள் - பகட்டுக்காரர்கள் - "இருளுக்குக்கூடப் பித்து உண்டு" என்று சாதிப்பர்!

பகட்டுக்காரர்கள், "முயலுக்குக் கொம்பு இருக்கிறது" என்று ஊன்றுவர்!

பகட்டினர், ஆகாயப்பூ என ஒன்று இருக்கிறதே தெரியுமா" என்பர்!

பகட்டு மனிதர்கள், "மலடிக்குப் பிள்ளை உண்டு" என வாதிடுவர்!

அப்பப்பா!

பகட்டுக்காரர்கள் பேசும் பொய், சொல்லில் அடங்காது!"

மேற்பாடலில் "மெய்யினுக்குண்டு" என்ற தொடர் சிறந்த தொடர்!

பொய் கூறுவோர் வளவள என்று பரக்கப் பேசவேண்டும்! அப்போதுதான் அவர்களின் பொய் எடுபடும்!

ஆனால், மெய்யுரைப்போர்க்கு அது தேவையில்லை!

மெய்யுரைப்போர்களின் பேச்சு அளவுக்கு உட்பட்டது!

இந்த நயத்தை நன்கு காட்டுகிறது மேற்பாடல்!

## 15

### Ostentatious!

The Pompous fellows
Will show up as if learned !
Will utter never truth !
Argue they will loudly

That the darkness possesses bile !
That the rabbit has horns !
That there is a variety as 'sky-flower' !
That there can be child for a barren lady !
O! Countless are the lies of the blustering !
But, restricted are the truthful!

(5)

**Terms Expounded**

[piccu - bile
meyyinukkuṇdāmē = meyyinukku + uṇdāmē

**Exposition**

"The pompous persons will show up always as if they are learned; They never utter truth!

Such persons will even say that there is bile for darkness!

They will also argue that rabbits have horns!

They will try to prove that there is a flower as sky-flower!

They will, with a stentorian voice, pronounce that there can be a ward for a barren lady!

Oh!

Countless are their lies!

But, for the veracious, the ways are limited!"

In the above chant, the poet's note that "for the honest, the ways are limited" is note worthy.

For woolgathering, a *fellow needs to search for many* ways to establish his argument!

But for the veracious, he need not find out innumerable ways!

The ways for the honest are limited.

This nuance has been incised in the above poem.

## 16

### *சகடம் போன்றோர்*

*பகடிகள்தாம் நற்றொன்றும் பொருள்போலும்*
*ஒருமெய்யோ டொன்பது பொய்கூட்டி*
*அகடமாம் உதாரணங்கள் பலவுரைப்பார் !*
*அரியதன் ஆக்கங் கேட றியார்!*
*விகடமொழி கொள்வார்கள் ! ஒருமைமொழி*
*மொழியார்கள்! துட்டத்தன மடையர் !*
*சகடம்போ லுறுதியொன்று மில்லாமல்*
*உரைப்பவர் தமக்குஅடை யாளமுமே !*

*(6)*

பொருட் குறிப்பு

[பகடி - பகட்டாளன்
நற்றொன்றும் = நல் + தோன்றும்
சகடம் - சக்கரம்: ஆகுபெயர்]

**விளக்கம்**

*"பகட்டாளர்கள், ஏதோ ஒரு சிறு மெய்யை வைத்துக் கொண்டு, அதனோடு சேர்த்துப் பல பொய்களைக் கட்டி உரைப்பார்கள் !*

அநீதியான பல எடுத்துக்காட்டுகளைத் தந்து, உண்மை ஆக்குவர்!

இதனால், அவர்களுக்குக் கேடு என்பதனை அவர்கள் உணர மாட்டார்கள்

அப்படிப்பட்டவர்கள், தந்திரமாகப் பேசுவர்! அவர்கள் துட்டர்கள்!

சக்கரம்போல, நிலையில்லாத, பேச்சுப்பேசி வருவார்கள் அவர்கள்!

பகட்டாளர்க்கு இவை அடையாளங்கள் என நீங்கள் நன்கு தெரிந்து கொள்வீர்!''

இப்பாடலிலும் ஆசிரியர், பகட்டுரையாளர்களையே நமக்கு அறிமுகம் செய்து வைக்கிறார்.

இவ்வாறு அறிமுகம் செய்வதானது இளையோர்க்கு அறவுரையாக அமையும்!

சகடம் என்ற சொல்லானது ஆகுபெயராய்ச் சக்கரத்தைக் குறித்தது. ''செல்வம் சகடக்கால் போல வரும்'' என்ற நாலடியாரின் தொடர் இங்கு நினைக்கத் தகும்.

# 16

## Wheel - like persons !

The Pompous -
Will add lies countless
With a truth single !
Will bring examples to their rescue
Full of unrighteous !
Won't understan their own downfall !
Will seek succour into trickery
Can be compared to a wheel as well !
For their unstable way of pomposity ! (6)

### Terms expounded

[pakaṭi - blustering person
narrōnrum = nal + tōnrum
cakaṭam - cart; Here it denotes wheel].

### Exposition

"The blustering persons will add countless lies to a single truth!

They will bring to their rescue innumerable unrighteous examples!

They won't realise the danger that will befall them because of such tendency.

They will adop trickery in speech; they are definetly base!

Their word as well as deed is like a wheel - unstable!

There are the symptoms for a ostentatious fellow!"

In this chant also, our poet introduces us a blustering individual.

Such an introduction becomes a very good counsel for us!

The word 'cart', indicating wheel is conspicuous. In Naladiyar we have the celebrated line- "Wealth will come like a wheel of a cart!"

## 17

### வீழ்வது உறுதி!

அறிவினர் பலரையுந்தான் நீதிதனை
அறிவித்தே அவர்களுக்கோர் துணையாச்

சிறியஅறி வினர்தமையும் பெரியஅறி
வினராக்கிப் பகட்டிக் காட்டி
நெறியிலாப் பொய்க்கதையை மெய்போலும்
எனநினைத்துப் பலரையுந் தான்மருட்டி
வெறியாக்கித் தாங்களுமோ கனக்கொம்பு
ஏறியுமொடிந் துவீழ்வார் கண்மிசையே!

(7)

## பொருட்குறிப்பு

[மருட்டி - அச்சுறுத்தி
மோகனக்கொம்பு - பகட்டு எனும் கழி]

## விளக்கம்

"அறிவாளிகள், பலருக்கும் நல்ல நீதிகளை உரைத்து, அவர்களுக்கு என்றும் துணையாக இருப்பர்!

ஆனால், சிறுமதியாளர்களோ, தம்மைப் பேரறிவாளர்கள் எனக்காட்டி, பொய்க் கதைகள் பலவற்றை மெய்போலக் கதைத்துப் பலரையும் அச்சுறுத்தி வாழ்வார்கள்!

அப்படிப்பட்டவர்கள், அவர்களின் பகட்டாலேயே அழிவார்கள்!"

இதுவே புலவர் கருத்து.

முதலடி ஈற்றில், 'இருப்பர்' என ஒரு சொல் வருவிக்க,

கி.பி. 18-ஆம் நூற்றாண்டுச் சமுதாயச் செய்தி இது!

ஆனால், இன்றும் இது பொருந்துவதாக உள்ளது! சொல்லப் போனால், இன்றுதான் இது முற்றிலும் பொருந்துவதாக இருக்கிறது!

ஆரவாரக் 'கதை'களுக்கும், ஆரவாரப் பகட்டுக்குமே இன்றைய உலகில் 'மதிப்பு' அதிகம்! அதைத்தான் சாடுகிறார் சத்திய ஞானி!

# 17

## Downfall is certain !

The Anchorites -
Proclaiming precepts,
Always live as partisans !
But the Pompous -
Always show off their 'stories'!
Threaten others they will
As if their 'stories' are true!
But,
Downfall is for them certain!
Fall down they will as if from a pole!
(7)

### Terms expounded

[maruṭṭi - threatening
mōhaṉakhombu - the pole of pomposity]

### Exposition

"The anchorites will preach morals to people thereby showing a right path for their life.

But the braggart will weave stories around a mole of truth!

The falsifiers will even threaten others!

Such swaggerers will, one fine morning, embrace downfall! They will fall headlong as if falling from a pole!"

These are the poet's view.

In the above chant, at the end of the first line, "so will be they" - is to be inserted for meaning.

The poet's idea belongs to 18th century.

But, it is relevant even today, nay, only for today!

'Din and bustle' find the first place in our society now! Our songster whips only this!

## 18

### பிறரையெல்லாம் கெடுப்பர்!

துட்டர்கள்தான் சம்மதித்துப் புரியார்கள்
தொழிலெல்லாம் பலவந்தம் புரிவார்!
சிட்டர்களை இகழ்ந்திடுவார் அதிகாரஞ்
சென்றதென்றால் ஊர்முழுதுங் கெடுப்பார்!
மட்டிச்சுபா வங்களால் முயற்சியொன்று மறியார்!
மனமயங்கி முன்னோர் வைத்த
பெட்டியெல்லாம் அழித்துப்பின் பொய்சொல்லி
பிறரையுமே கெடுப்பரின்னும் பலவே!

(8)

#### பொருட்குறிப்பு

[பலவந்தம் - வற்புறுத்தல்
சிட்டர் - பெரியோர்
மட்டிச்சுபாவம் - மூடத்தனம்
பெட்டி - பொருள்: ஆகுபெயர்]

#### விளக்கம்

"தீமதியாளர்கள், முயற்சி செய்யாத சோம்பேறிகள்!

இப்படிப்பட்டவர்கள், மற்றவர்களோடு இணங்கிப் போக மாட்டார்கள்!

மற்றவர்களைக் 'கட்டாயப்படுத்துவார்களே தவிர, அவர்களோடு ஒத்துப்போக மாட்டார்கள்!

முன்னோர் தேடிவைத்த சொத்துகளை உண்டு களிப்பார்களே தவிர, தான் எதையும் தேடும் முயற்சி கொள்ளார்!

இவர்களால் ஊருக்குத்தான் தீங்கு!"

இவையே புலவர்தம் கருத்துகள்!

நாகைச் சத்தியஞானியின் இத்தகைய கருத்துகள், சமுதாயத் தோடு இயைந்தவை!

பதினெண்கீழ்க்கணக்கு நூல்கள் பகரும் நீதிகளுக்கும், சத்தியஞானி நீதிகளுக்கும் ஒரு வேறுபாடு உளது!

பதினெண்கீழ்க்கணக்கு நீதிகள் நீதிநூற்களில் வழக்கமாக உரைக்கப்படும் தனி நீதிகள்!

ஆனால், சத்திய ஞானி உரைப்பவை, சமுதாயத்தை நேரே கண்முன்னால் கொண்டுவருபவை! இவை அனுபவ மொழிகள்! அதனால்தான், அனுபவத் திரட்டு ஆயிற்று!

## 18

### They will go on spoil others!

The Wicked-
Never with the learned compromise!
Get things under duress done!
Execrate the high souled!
Being lazy, spoil the wealth of ancestors!
Being falsifiers, spoil others
O! their atrocities are numberless!

#### Terms expounded

(balavandam - duress
ciṭṭar - dignified

maṭṭiccubāvam - tomfoolery
peṭṭi - wealth)

**Exposition**

"The base will always intimidate other for their own ends!

They never compromise with others!

They only waste away their ancestors' wealth! They are lazy fellows!

They will spoil their town entirely!"

These are the views of Nagapattinam Satyajnani.

There is a conspicuous difference between the 18 kīḻkk-aṇakku books and our present compendium.

18 books depict the ethics that are usually composed in moral books.

But, Satyajnani's views are samewhat different! He articulates from his own experience; He picturises his society in front of us!

This is the main difference. That is the reason why this is called "A compendium of the Ethicāl Experiences"

# 19

## காண்டற்கு அரிது !

மடிசலத்தின் குற்றந்தான் எல்லாந் தெரியு
முதிர்பகடி யாங்குற்ற
முடிவான அறிவினர்க்கே தெரியுமன்றி மற்றவருக்
கதுதெரியா தாமே !

வடிவான அறிவர்குணம் எப்போது மெவ்விடத்தும்
ஒன்றாயே நிற்கும் !
வடிவிலா மூவர்குணம் ஒன்றிலொன்று மாறி
நிற்பதுவும் அறிமின் !

(9)

## பொருட் குறிப்பு

[மடிசலம் - அலையுடைய நீர்
பகடு - படகு; குற்றியலிகரம் பெற்றுப் பகடி ஆனது]

### விளக்கம்

"அலைகளை உடைய நீரானது தூய்மைக் குறைவை உடைத் தானதானால், அதைப் பார்த்தவர் எவரும் எளிதிற் கண்டுபிடித்து விடுவர் !

ஆனால், அந்நீரில் ஓடும் படகில் இருக்கும் சிறுசிறு குறைகள் மற்றவர் கண்களுக்கு அவ்வளவாகத் தெரியாது !

அதுபோலவே, அறிவாளிகளின் நற்குணம் ஒன்றுபோலவே இருக்கும் !

ஆனால், அறிவிலிகளின் பண்புகளோ மாறிமாறி இருக்கும்!"

# 19

## Unfathomable!

Visible is the dust and dirt over water !
Invisible is the defect in a boat !
The enlightened always stable remain !
The unvirtuous change colour always !

(9)

### Terms Expounded

[maṭi calam - water full of waves
pahadu - boat; with short 'i', it became pahadi]

### Exposition

"Water, full of waves, if contains solid impurities, everybody will find out easily !

But the boat in it, if has faults, it won't be that much visible.

Likewise, the virtuous will always remain constant in their attitude, while the base will be changing their colour always!."

## 20

### உலகினைக் காப்பர் !

அறிவினரே மேற்கொண்ட பசுமுதற் செங்கோலும்
உலகினையும் காப்பர் !
அறிவினர் வீரமே தவமெனக்கொண் டனைவருக்கும்
காவலது புரிவார் !
அறிவிலரே மேற்கொண்டாற் பகட்டாலும் சலத்தாலும்
மறுமடியி னாலும்
வெறியாக யோசனையும் செங்கோலும் உலகினையும்
வீண்செய்திடு வாரே !

(10)

பொருட் குறிப்பு

[சலம் - பொய்
மடி - சோம்பல்]

### விளக்கம்

"அறிவாளிகளிடம் ஆட்சி செல்லுமேயானால், பசு முதலிய எல்லா விலங்குகளும்கூட இன்புறும்; அவரது ஆட்சியில் நீதி தவழும்!

அறிவுள்ள ஆட்சியர், வீரத்தைத் தவமாகக் கருதி, மக்களுக்கு எவ்வித இடையூறும் வராமற் காப்பார்!

அறிவீனர்களோ, பகட்டாலும், பொய்யாலும், வெறித்தனம் கொண்டு, நீதி தவறி, உலகினைப் பாழ்படுத்துவர்!"

இங்கு கூறப்படும் நீதிகள், மன்னராட்சிக் காலத்திற்கும் கலந்து கூறப்பட்டனவாக உள்ளன.

நீதி நூற்கள் மக்களுக்கு எந்த அளவு நீதி உரைக்கின்றனவோ, அந்த அளவுக்கு மன்னர்களை இடித்துக் கூறியே வந்துள்ளன என்பது ஒரு வரலாற்றுண்மை ஆகும்!

## 20

### They will save us!

The Prodigies -
Will strive hard to save souls
Will exhibit valour to save subjects!
The pompous -
Full of laziness and pomposity
Will do harm to the world root and
branch!

(10)

### Terms expounded

[calam - falsehood
madi - apathy]

## Exposition

'The enlightened wiil save people and even animals under their control!

They will protect people with valour and courage!

On the contrary, the base will only spoil the entire land root and branch on account of their sluggishness and boasting."

The poet's ethics are suitable not only for the olden kings but also for the modern rulers.

In general, in Tamil, always morality has been preached both for the subjects as well as for the monarchs in equal proportion.

# 21

### பார்க்க ஒன்றாகத் தான் தெரியும்!

அறிவினரும் அறிவிலரும் பார்த்தவருக் கொன்றாய்த்
தானிருந்தாலு மவர்கள்
குறியாகச் செய்கருமங் களில்வேறு படுவர்!
கொடியிடையார்க் குமதுவாம்!
நெறியாக வொருசொல்லே சொன்னவுடன் கொள்வர்
நெறியோர் மற்றவரைத்
திறிவிதமாங் கண்டனை தண்டனையுங் கைவிடா(து)
ஆளுதலுங் கடமை!

(11)

பொருட்குறிப்பு

[கருமம் - செயல்
கொடியிடையார்க்கு - பெண்ணுக்கு
திறிவிதம் - மூவிதம்; எதுகை நோக்கி, இடையின ரகரம், வலித்தது]

விளக்கம்

"பார்வைக்கு அறிவாளிகளும், அறிவற்றவர்களும் ஒன்றாகவே கண்ணுக்குத் தென்படுவர்!

அவர்கள் செய்யும் செயல்களைக் கொண்டுதான் நல்லவர், தீயவர் என்று பிரிக்க முடியும்!

பெண்களுக்கும் இந்நீதி பொருந்தும்!

நெறிப்படி வாழ்வோர்க்கு, ஒரு சொல் சொன்னால் போதுமானது! உடனே செம்மைப்படுவர்! நல்வழி மேற்கொள்வர்!

ஆனால், தீநெறியாளரை, மூன்று விதங்களில் நடத்துதல் வேண்டும் - கண்டித்தல், தண்டித்தல், அதிகாரத்திற்குள் வைத்திருத்தல்!"

இவை புலவரின் கருத்துகள்!

'மக்களே போல்வர் கயவர்' என்ற திருக்குறளின் கருத்தை இவர் எடுத்தாண்டுள்ளார்.

"நீதிகளெல்லாம் ஆணுக்கு மட்டுமா? பெண்ணுக்கும்தான்" என்று நம் புலவர் புகன்றிருப்பது தேவையான விளக்கமே.

வழியல்லா வழியிற் செல்வோர் மீது எப்போதும் ஒருகண் இருக்க வேண்டும் என நம்மை எச்சரித்துள்ளார் புலவர், பாடலின் ஈற்றில்!

# 21

## They look like the same !

To gaze at -
Look alike both the Wicked and the Virtuous !
A single word -
Is enough to mend the righteous
But -
Three modes essential are
Censuring, Punishing and Controlling
To contain the base !

### Terms Expounded

[karumam - deed
kodiyidaiyārkku - for women
tirivitam - three kinds; r - changed as ṟ for Initial Rhyme]

### Exposition

"Both the block - headed and the prodigies look alike physically!

But, when we come to their deeds, the difference crops up!

The virtuous can he easily mended by a single word! whereas the vile persons should be deallt with in three ways — censure, scourging and controlling!"

These are the notions of our poet Satyajnāni.

Poet has taken the couplet of Thiruvaḷḷuvar, "Makkalē pōlvar kayavar" for the above chant.

"The moral preachings are not only for men but also for women as well!" — This view of our songster is conspicuous.

In the end his chant, he has rightly warned us to have vigilant watch on the unrighteous!

# 22

## ஐம்பிறையாய் வளரும்!

*அறிவினர் அடுக்காகும் மறைய னைத்தும்*
*அறிந்து காரியங்கள் புரிந்திடுவார் !*
*அறிவினர் அறிவுடைமை கல்வி காரியம்*
*சொல்பொறை களிலும் அறிந்திடலாம்!*
*அறிபொறை ஆயிரம் விதமும் நன்மைதரும் !*
*சினமும் ஆயிரவிதமுங் கெடுக்கும் !*
*அறிவின் அகண்டபுடம் ஐம்பிறை போலும்*
*வளர்ந்தேறுங் குறையுமறி விலார்க்கே!*

(12)

### பொருட்குறிப்பு

[மறை - வேதம்; மறைபொருளுமாம்
பொறை - பொறுமை
புடம் - இடம்
ஐம்பிறை = ஐ+பிறை
ஐ - அழகு
ஐம்பிறை - அழகிய பிறைத்திங்கள்]

### விளக்கம்

"அறிவு சான்றவர்கள் மறைகளை எல்லாம் அறிந்து செயல் புரிவர்!

அறிவாளிகளின் செயல், சொல், பொறுமை முதலியவை களிலிருந்து அவர்களின் அறிவுடைமையை நாம் விளங்சிக் கொள்ளலாம்?

அறிவும் பொறுமையும் எத்தனையோ விதங்களில் நம் வாழ்க்கையில் நன்மை பயக்கும்!

ஆனால், சினமோ ஆயிரம் வழிகளில் - எத்தனையோ வழி களில் நம்மைச் சீரழிக்கும்!

அறிவின் பரப்பானது நாளுக்கு நாள் வளரும் தன்மை உடையது!

ஆனால், அறிவிலாதவர்களுக்கோ, இருக்கின்ற சிறிதளவு அறிவும் நாளுக்கு நாள் தேயும்!''

இவையே புலவரின் கருத்துகள்!

''ஒருவனது ஒவ்வொரு செயலிலிருந்தும் நாம் அவனது அறிவு ஆழத்தை நன்கு விளங்கிக் கொள்ள முடியும்'' என்று புலவர் **சத்திய ஞானி** கூறியுள்ளது சிறப்பானது!

இக்கருத்து வாழ்க்கை நடைமுறையோடு நீதி இலக்கியத்தை இயைப்பதாக உள்ளது!

வாழ்க்கையிலிருந்து விலகியது தமிழ் என்ற கருத்தைத் தகர்க்க வல்லது!

## 22

### Flourish like a crescent !

The Enlightened
Will execute deeds after weighing all !
In every wich of their accomplishments
Can be read their enlightenment !

Erudition and Forbearance
Will render benefits in thousands !
Alas! Anger will bring in plight in thousand!
Wisdom will spread like a crescent beautiful !
For the boobies will disintegrate their wee
knowledge !
(12)

**Temrs expounded**

[marai - Vedas; also hidden truths
porai - for bearance
puṭam - location
aimbiral = ai + pirai
ai - beautiful
aimbirai - elegent crescent]

**Exposition**

"The wise will consummate everything after analysing everything!

From their word, deed and forbearance we can swimmingly grasp their enlightenment.

Intellect and forbearance will fetch prosperity to life immeasurably!

But, wrath will usher in only calamity to life!

Intellect will flourish day by day!

But, for dolts, even their little wisdom will vanish gradually!"

These are all our poet's views.

Our songster's opinion that we can understand one's knowledge from one's each and every deed is praiseworthy.

This proves the utility of Ethical Literature in our mundane life.

This is a jolt to the popular notion that Tamil is keeping aloof from earthly life.

# 23

## இருவகை அறிவினர்!

அறிவினரே அறிவினரு மதிலும்பே
    ரறிவரென இருவகையா யிருப்பர்!
அறிவினர் பேரறிவோர் அறிவிக்க
    அறிவரன்றி முழுதுந் தாமறிவர்!
அறிவிலார் சிற்றறிவோ ரதிலுஞ்சிற்
    றறிவரென இருவகையா யிருப்பர்!
அறிவினரே நெறியறிவார் அறிவிலரே
    நெறியறியா ராக விருவிதமே!

(13)

### பொருட்குறிப்பு

[பெரிய+அறிவர் = பேரறிவர்
பெரிய+அறிவோர் = பேரறிவோர்
நெறி+அறிவார் = நெறியறிவார்;
உடம்படுமெய் வந்தது]

### விளக்கம்

"அறிவாளிகள், பேரறிவாளிகள் என அறிவாளிகளில் இரு வகைகள் உளர்!

இருவருமே, பிறர் கூறும் அறிவைப் பெறுவதோடு, தாமாகவும் சிந்தித்து அறிவை வளர்த்துக் கொள்வர்!

அறிவிலிகளும் இருவகையர் உளர்!

சிற்றறிவாளர், அதைவிடச் சிற்றறிவாளர் என இரு வகை!

அறிவாளி, அறிவிலி எனும் இந்த இருவகையாரையும் நெறிகளை அறிந்தவர்கள், நெறிகளை அறியாதவர்கள் என இரு வகைகளாகப் பகுக்கலாம்!'' - என்று ஆசிரியர் **சத்தியஞானி** முழங்குகிறார்!

அறிவாளி, அறிவிலி என்ற இரு வகைகளில் மட்டும் மக்களை அடக்கமுடியாது எனவும், அவர்களுள்ளும் உட்பிரிவுகள் உள என்றும் நூலாசிரியர் உரைப்பது காண்டற்குரியது.

அறிவு என்பதை நெறியறிதல் என்று புகழ்வது சிறப்பானது,

நெறியிலாது அறிவு பெற்று யாதுதான் பயன்?

# 23

## Two kinds of prodigies!

Two kinds in Enlightened;
One Wise, the other More Wise!
Two have qualities common —
Self thinking along with acquiring wisdom!
Two kinds in Dolts;
One Dunce, the other great Dunce!
The Wise know the path virtuous
The Blockheads know not the path virtuous!
(13)

### Terms Expounded

[Periya + arivar = pērarivar
periya + arivōr = pērarivōr
neri + arivār = neriyarivar; a consonant appeared as servile]

### Exposition

"Among the genij, there are two varieties — one is genius and the other, more genius.

But, both, apart from their gathering wisdom, will inculcate their own originality.

Among the dunces, there are two kinds-one is air headed and the other is great air-headed.

The wise know the right part while the dolts know not it!"

Thus proclaims Satyajnāṉi.

His perception that apart from the broad divisions-wise and Fool, we have more subtle inner divisions is noteworthy.

The author interprets Wisdom in the line of Ethics.

What is the use of erudition without righteousness?

## 24

### உயிர்போலக் காப்பர்!

*அறிவினர் நீதியினை உயிர்போலுங் காத்திடுவர்*
*அனுமான மில்லை!*

அறிவினர் நீதியெனும் விதைவித்தை வித்திவிளையும்
அதிலாயபல னைக்கொள்வர் !
அறிவிலர் நீதியினைத் தங்களுக்கோர் பகையென்றே
அழித்திடுவர் கண்டீர் !
அறிவிலர் அநீதியெனும் வித்தைவித்தில் பலன்தின்னக்
கொடுத்திடுவார் யாரே !

(14)

பொருட்குறிப்பு

[அனுமானம் - ஊகம்
வித்தி - விதைத்து]

**விளக்கம்**

''அறிவாளிகள் நீதியினைத் தம் உயிரேபோலக் காப்பாற்று வார்கள்! இது வெறும் ஊகத்தில் கூறப்படுவதில்லை!

அறிவாளிகள், நீதி எனும் விதையை விதைப்பார்கள்! அதில் பலன் விளையும்! அந்தப் பலனைப் பிறர் பெறுவர்! தான் பெற்றுப் பிறருக்குக் கொடுப்பர்!

ஆனால், அறிவற்றவர்களோ நீதி என்பதையே தங்களுடைய பகைவர்களாக அல்லவா கருதுகிறார்கள்?

பகைவர்களாகக் கருதிப் பகைவர்களைக் கொல்வதுபோலக் கொல்கிறார்களே!

அப்படிப்பட்ட அறிவிலிகள் அநீதி எனும் விதையை அல்லவா விதைக்கிறார்கள்?

விதைத்து, அதன் தீய பலனைப் பிறருக்கு அளிக்கிறார்களே!''- என்று பொங்குகிறார் புலவர் நாகைச் சத்தியஞானி!

''நீதி எனும் விதையைச் சமுதாயத்தில் விதைத்தால்தான். மக்களும் நல்லவர்களாக நமக்குக் கிடைப்பார்கள்'' என்ற கருத்தே நம் புலவரின் கருத்தாக உள்ளது!

மிகவும் சரியான நோக்கு இது!

மனச்சாட்சி என்பது துளியும் இல்லாமல் இருக்கும் இக்காலத்து மக்கள் பலருக்கு நல்ல அறிவுரையாக இப்பாடல் அமைந்திடக் காண்கிறோம்!

# 24

## Save as their own life !

Not a conjecture but a true
That the Wise will save Justice as their life !
They will sow the seeds of Justness
To reap the fruit of Justice !
They will shower its benefits on all !
The **Boobies** think Righteousness as enemy!
They sow seeds of Injustice
And distribute its fruits to one and all !

(14)

### Terms Explained

[aṉumāṉam - conjecture
vitti - sown]

### Exposition

"The intelligents will save and protect Justice as their own of very life !

They will sow the seeds of Probity and Righteousness to render prosperity to many and many!

On thc contrary, the blackheads will sow only the seeds of immorality only to supply people with injustice!"

These are the excellent notions of our poet in this text.

"To get worthful people, sowing the seed of righteousness is a must!"

This is our poet's view which is very relevant to this date of our life.

In today's society, we see many people who are heard-hearted. So our poet's advice is suitable to our present day society quite aptly.

## 25

### கடல் பேரல் இருக்கும் !

அறிவினர்த முளமதுதான் கடல்போலும் ஆயிரமும்
அடக்கியே இருக்கும் !
அறிவிலந்த முளத்திலே மறையேதுந் தங்கரிது
வஞ்சகமே யன்றி
அறிவினர்தங் கட்டளையா லுலகுக்கு நன்றாகு
மனைவர்க்கு நன்றாம்
அறிவிலர்தங் கட்டளையா லுலகுக்குத் தீதாகு
மனைவர்க்குந் தீதே ! (15)

#### பொருட்குறிப்பு

[தமுளம் = தம் + உளம்
தீதாகுமனைவர்க்கு = தீதாகும் + அனைவர்க்கு]

#### விளக்கம்

"அறிவு சான்றவர்களின் உள்ளம், கடலை நிகர்த்தது! கடலுக்குள் பல பொருட்கள் உள! வெளியே தெரிகிறதா? இல்லையே! அதுபோலவே அறிவாளிகளின் உளமும்!

ஆனால், அறிவற்றவர்களின் உளத்திலே எதுவும் தங்காது! எதையும் பறை சாற்றிக் கொண்டிருப்பர்!

அறிவுசான்ற நல்லோர்களின் ஆணையால், உலகு நன்மை பெறும்! அனைவருக்கும் நலம் விளையும்!

ஆனால் அறிவு இல்லாதோரின் ஆணையால், அனைவரும் துன்பமே படுவர்!"

## 25

### Like a sea !

The heart of Learned
Will remain like a sea !
At their besest world wil! prosper !
The heart of the dunces
Will remain calm never !
At their edict world will putrefy !

(15)

**Terms expounded**

tamuḷam = tam + uḷḷam
tītākumāṉavarkku = tītākum + māṉavarkku]

**Exposition**

"The heart of the exalted is like a sea. Though the sea keeps many treasures in its won't, it womb exhibit them outwardly. In the similar fashion, great also won't tomtom their heart !

On the contrary, nothing wil! settle concealed in the heart of the dullards.

At the mandate of the sages, world will flourish!

At the edict of the dolts, world will perish!"

# 26

## கூட்டமாகச் செய்க!

உலகத்தில் அறிவினர்தங் கூட்டமொடு
செயலுந்தான் மேற்கொண்டு தானால்
உலகத்தில் சிற்றறிவினார் கூடவவ
ரைப்போல் உணர்வினார்க ளாவர்!
உலகத்தில் அறிவிலாமூ வர்செயலொடு
கூட்டம் ஓங்குமே யானால்
உலகத்தில் எல்லாரும் அவரைப்போல்
அறிவினர் என்றும் பேசார்!

*(16)*

### பொருட்குறிப்பு

*[கூடவவரை = கூட + அவரை]*

### விளக்கம்

"இந்த உலகில், அறிவாளிகள் ஒரு கூட்டமாக நின்று, தம் செயலைச் செய்வார்களே யானால், அறிவிலிகள்கூட மேம்பட வழி கிட்டும்!

அப்படி இல்லாமல், அறிவிலார் கூட்டமே செயல்படத் தொடங்குமானால், அதனால் அறிவற்றோர் தொகையே பெருகும்!"

சிறந்த சனநாயகத் (Damocratic) தத்துவம் இது!

அறிவாளிகளாயினும், ஒரு கூட்டமாகத் திரண்டு செயல்பட வேண்டியது காலத்தின் தேவை!

# 26

## Do it enmass

Sages should assemble for their goals!
Then the dullards can transform at least!
If the dolts add strength
Only blockheads will increase in number!

(16)

### Terms expounded

[Kudavavarai = kude + avarai]

### Exposition

"The great should muster their strength. Then only the dolts could transform their stupidity..

On the otherhand, if the blockheads gather together, than only the number of simpletons will out number!"

A fine democratic theory is this!

At the present day juncture, this counsel is very much needed.

# 27

## தலைவர் மொழி மறவேல்!

*உண்மையவர் தந்தலைவர் மொழிமறவார்!*
*தாமுரைத்த மொழியுந் தப்பார்!*
*உண்மையினோர் அரியமறைக் காவார்கள்!*
*ஒருமைதனை நலமுறவே காப்பர்!*
*உண்மையிலார் தந்தலைவர் மொழிமறந்து*
*வேறாகித் தாமொன்று புரிவார்!*

உண்மையிலார் அரியமறைக் காவாரோ ?
அறைபறையே எனவனைய ராவார் ! (17)

## பொருட் குறிப்பு

தன் + தலைவர் = தந்தலைவர்

மறவர் - மறக்கமாட்டார்;
இடை ஆகாரம் எதிர்மறைப்பொருட்டு.

மறைக்கு + ஆவார் = மறைக்காவார்]

## விளக்கம்

"வாய்மை மிக்கோர், தங்களுடைய தலைவர் மொழிகளின்படி நடப்பர்!

அப்படிப்பட்ட வாய்மையர், தாம் கொடுத்த வாக்கையும் காப்பாற்றுவர்!

வாய்மை மிகுந்த நல்லவர்கள், தம்மிடம் கூறப்பட்ட இரகசியங்களைக் காப்பார்கள்!

ஆனால், பொய்யர்கள், தங்களின் தலைவர்கள் மொழிகளைக் காற்றில் பறக்கவிட்டு விடுவார்கள்!

இப்பொய்யர்கள், இரகசியம் எதையும் தம்முள் வைத்திராது, "அடிப்போம் பறை" என்று, பறையடிப்பவனை ஒத்து நடந்து கொள்வர்!"

இப்பாடலில், காலத்துக்கு ஏற்ற **அரசியல் நீதி** கூறப்பட்டுள்ளது!

தலைவர்களுடைய வழிமுறைகளை மறந்துவிட்டுச் செல்வோர்களுக்கு நல்ல அறிவுரை இப்பாடல்!

## Don't forget your leader's path !

They are men of Verocity
Who never swerve the path of their leaders !
Who never fail to keep promise of theirs !
They are lying boasters
Who never pay heed to the leader of theirs !
Who tomtom everything always !

(17)

### Terms expounded

[tan + talaivar = tantalaivar
maravār = marakkamāṭṭār; Intermediate ā is for negation
maraikku + āvār = maraikkāvār]

### Exposition

"Men of veracity will follow the foot prints of their learder in word and deed!

Such individuals will also keep up and honour their promise!

On the contrary, the braggarts will never pay heed to their leader's voice ! They won't keep any secret within themselves. They will only tomtom everything !"

In this stanza, a need of the hour has been met with.

A lesson to those who wink at their leader's principles for their ends.

# 28

## சிலசிலதான் செய்வார்கள்

அறிவிலே சிற்றறிவோ ரென்பவர்கள்
மூவருந்தாம் அறிவினராய் மிஞ்சி
அறிவினர் தம்முடனே பழகியவர்
நடைநொடிநற் பாவனைகற் றாலும்
அறிவினர் செய்கின்ற கருமத்திற்
சிலசிலதாஞ் செய்வார்கள் அன்றியும்
அறிவினர் சுபாவமா நீதிக்கே
உரியவாய் முழுதாக மாட்டார்! (18)

### பொருட்குறிப்பு

[நடை - ஒழுக்கம்
நொடி - பேச்சு
பாவனை - நடத்தை
நற்பாவனை - நன்னடத்தை
கருமம் - செயல்
சுபாவமாக - பண்பாக]

### விளக்கம்

''சிற்றறிவாளர்கள், பேரறிவாளர்களுடன் பேசிப் பழகத்தான் செய்கிறார்கள்!

ஆனால், அவ்வாறு பேசிப்பழகி, நற்குணங்களை முழுதுமாகப் பெற்றுத் தான் ஒரு நல்லவனாக ஆகிறார்களா?

இல்லை!

ஏதோ சில நல்ல பழக்கம், பேச்சு முறைகளை மட்டும் கற்றுக் கொண்டு அதன்படி நடக்கிறார்களே தவிர முற்றிலுமாக அந்த அறிவாளிகள் போல, முழு நன்மனிதராக ஆவதில்லை!'' - என்பதே மேற்பாடலின் திரள் கருத்து.

மக்களோடு பழகி, மக்களின் குணங்களை நன்கு அலசி ஆய்ந்து கூறிய கருத்துகள் இவை!

## 28

### Only a few they will do !

The base
Will learn from the learned
Only a few, quite few !
They understand in full never the great
They transform into full man never (18)

#### Terms expounded

[nadai - demeanour
nodi - speech
pāvaṇai - gait
narpāvaṇai - excellent deportment
karumam - deed
subāvamāha - habitually]

#### Exposition

"Men of imperfect knowledge will imitate the learned and that too in a few!

Such people never grasp and never, on their own, wish to behave morally in society!

Only in speed and in some aspects of behaviour they follow the virtuous.

But they never, in to to, transform into man of probity!"

These notions of our poet is, definitely, an outcome of his vast worly experience.

## 29

### மீனைக் கொத்தும் குருகு !

குணகுறிகள் எல்லாந்தான் அறிந்ததிலே சற்றும்
முதற்குண மூன்றுந் தெரிக
குணசித்தும் அசித்தும் அறிந்தொரு மீனைத்தெரி
குருகிற் பலகருமம் முடித்துக்
குணமென்னுங் குன்றேறி நின்றார் கள்தம்மைச்
சேர்ந்தே முகில்வர வெகுண்டார்
கணமேயுங் காப்பரிதா மதனாலே சுடுசொல்
தூண்டிக் காய்வான் திறமே ! (19)

### பொருட்குறிப்பு

[குணம் மூன்று - சத்து, சித்து, ஆனந்தம்
சத்து - அழியாதது
சித்து - அறிவு
ஆனந்தம் - இன்பம்
குருகு - நாரை
முகில் - மேகம்; இருட்டு]

### விளக்கம்

"நீர்ப் பரப்பில் மீன் எங்குள்ளது என்று ஆய்ந்து பார்த்து அதைக் கொத்தும் நாரை!

அதைப்போல. சத்து, சித்து, ஆனந்தம் எங்குள்ளன என்று கண்டு, அதைத் தேர்ந்தெடுக்க வேண்டும்!

பெரியவர்கள் - குணமாகிய குன்று மீது ஏறி நிற்போர், வெகுளியைத் தாங்க மாட்டார்கள்!

இதனை உணர்ந்து, சுடுசொல்லால் பிறர் சினத்தைத் தூண்டி விடும் பழக்கத்தைக் கைவிடல் வேண்டும் !"

இதன் மூலம் ஆசிரியர் ஒரு சைவர் என்றும், **சைவ சித்தாந்தாந்தம்** அறிந்தவர் என்றும் தெளிகிறோம்.

"குணமென்றுங் குன்றேறி நின்றார்" என்ற **திருக்குறள்** கருத்தை ஆசிரியர் எடுத்தாண்டுள்ளார் என்பதும் குறிப்பிடத் தக்கதே.

# 29

## Fish pecking cormorant

Strive hard to pick three up
Eternal, Erudition and Bliss !
Like a cormorant pecking a fish !
Knowing the sages can't bear the wrath
Never indulge in enkindling with words harsh !
(19)

### Terms expounded

[Three aspects - Eternal, Erudition and Bliss.
cattu - Eternal
cittu - Knowledge
ānantam - Bliss
kuruku - cormorant
muhil - cloud; darkness]

### Exposition

"The cormorant will strive nither and thither to peck a fish !

Likewise, we should pick up the three traits viz., Eternal, Erudition and Bliss.

The prodigies, full of excellent disposition seldom suppress their wrath !

So, grasping this, one should not enkindle other's rage."

From this stanza, it is evident that the author is a Savaite and wellversed in Saiva Siddhāntā.

It may be pointed not here that our songster has quoted a couplet of Tirukkural viz., "Kuṇameṉṉum kuṉreri."

## 30

### நன்மொழியும் கண்டிப்பும் !

உற்றதனை அறிகின்ற உபாயமும் மற்றதாகக்
கற்ற தந்திரமும் இரண்டும்
கற்றவர்கள் இருவிழியாகக் கொண்டு கருமத்
திறமும் கடவுள் செயலிரண்டு
முற்றிய ஆலோசனையாக் கொண்டு கனநயம்
இரண்டும் செய்கையினிற் கொண்டு
மற்றநன் மொழிகண் டிப்பெனு மிரண்டுஞ்
சொல்லதனிற் கொண்டு நடப்பதுவே !

(20)

பொருட்குறிப்பு

[கருமத்திறம் - செயல்திறம்]

### விளக்கம்

"படிப்பறிவு, பட்டறிவு இரண்டையும் கொண்டு செயல்படுக!

இந்த இரண்டும், இரு கண்கள்போல அமையவேண்டும் நமக்கு!

அவற்றுடன், செயல்திறன், கடவுள் செயல் என்ற இரண்டும் கொள்ளுக!

அம்மட்டோ?

ஒரு செயலை வன்மையாகச் செய்யவும், மறு செயலை மென்மையாகச் செய்யவும் அறிந்துகொள்க!

அதேபோலப் பேச்சிலும், மென் மொழிகளாற் பேசவும், கண்டிப்பாகப் பேசவும் அறிக!

இந்த அறிவே நடைமுறை வாழ்வுக்கு உதவுவதாகும்!"

மிகவும் அனுபவ அடிப்படை கொண்ட நீதிச் சாற்றுதல்கள் இவை!

இங்கே ஆய்வுக்குரியது அல்லது விலக்கத் தக்கது கடவுள் செயல் என்ற கோட்பாடே!

'கடவுள் செயல்' என்று ஒத்துக்கொண்டால், 'நீதி' எதற்கு, 'திரட்டு' எதற்கு? எல்லாமே 'அவன் செயல்' என்று போய் விடலாமே!

## 30

### Soft words as well as harsh words

Acquire knowledge through the ways two
Learning as well as Experience !
Have the talent though the ways two
Executive as well as Belief in God !
Consummate deeds through the ways two
Rough as well as Soft !
Design your expression through the ways two
Harsh as well as Sweet !

(20)

### Terms expounded

[karumat tiram — executive skill]

### Exposition

"While consumating deeds, you must utilise your bookish knowledge as well as your own experience!

These two, knowledge and personal trial, must be your twin eyes!

By the by, you must have belief and faith in God along with your executive talent!

You must learn to consummate anything by these two ways Coarse and Tender!

In the same veins, design your speech in two ways, according to demand — Velvety as well as Stony!

## 31

### அனுபவம் தேவை !

முறையாக ஒருகருமம் அறிஞர் நூல்
  முறைப்படியே கற்றுணர்ந்த போது
முறையாக அவர்சொல்லக் கேட்டாலுஞ்
  சித்திதான் காலாகு மன்றி
முறையாக முழுதுந்தான் தெரியுமோ ?
  மிகுந்தஅறி வினரான போது
முறையாகப் பழகிவரும் அனுபவத்தால்
  முக்காலாய் முழுதுமே தெரியும் !

(21)

## பொருட்குறிப்பு

*[காலாகும் - காற்பங்காகும்*

*சித்தி - வெற்றி]*

## விளக்கம்

*"நூற்களைப் படித்துப் பல கற்கலாம்! அறிஞர்களின் வாய்ச் சொல் கேட்டும் பல கற்கலாம்!*

*ஆனால், இது முழுவெற்றி ஆகாது!*

*காற்பங்கு வெற்றியே இது!*

*முழுப்பங்கு வெற்றிக்கு என்ன செய்ய வேண்டும்?*

*பட்டறிவு பெறவேண்டும்!*

*அனுபவத்தால், பட்டு, அறிந்து கொள்வதே முழு வெற்றி, முழு அறிவு ஆகும்!"*

*வாழ்க்கையில் ஒருவனுக்கு இருக்கவேண்டிய அனுபவம் பற்றி மிகத் தெளிவாக உரைக்கிறது இப்பாடல்!*

*படிப்பில், தர இயலாத எத்தனையோ நுணுக்கங்களைப் பட்டறிவே தருகிறது!*

# 31

## Personal trial is needed !

Learning through the Books
Learning through the Learned
Both combined will render Success quarter !
But only portion

For success complete is needed
Your own personal experience
The three-fourths remaining
You must obtain through Personal trial !
(21)

**Terms expounded**

[Kālākum - become only ¼ portion
citti - triumph]

**Exposition**

"We can accord wisdom through books as well as through sages!

But, this is only quarter portion!

What must be done for fuller wisdom and trimphant life?

Practical wisdom!

Yes! We must have erudition through personal trial!

Then only full triumph can be attained in life!"

Thus expatiates our bard.

It must be admitted that experience alone make a man full in the concerned field!

Countless nuances can be accorded only through persona experience.

# 32

## நடிக்காதே !

அறிவினர் காரியமொன்று தொடங்குங்கால்
அமைதலோடு துமியவாங் கிரண்டு
அறிஞரோடு தேறிப்பின் அறியாதார்போல்
அடங்கி யிருந்துமே முடிப்பார் !
அறிவிலர் எல்லாந்தாம் அறிந்தவரைப் போல்
கற்வித் தளவு மறியாமல்
அறிவில் பறைபோல் இயற்றி இடையிலே
பெயர்வர முடிவது மின்றாமே !

*(22)*

### பொருட்குறிப்பு

[துமிய - ஐயமற
பறை - பறை வாத்தியம்
பெயர் வர . நற்பெயர் ஏற்பட]

### விளக்கம்

''அறிஞர்கள் எச்செயலைச் செய்தாலும், தான் அதுபற்றி அறிந்து, அதனோடு நில்லாது, அறிஞர் பிறரையும் உசாவி அறிந்து, அவற்றின் பின்னர், தாம் ஏதும் அறியாதான் போல நின்று, அச்செயலை முடிப்பார்கள்!

ஆனால், அறியா மக்களோ, தமக்கும் தெரியாது, பிறரையும் கேட்காது, எல்லாம் அறிந்தவர் போல் பாசாங்கு செய்து, தமக்குக் கெட்ட பெயர் ஏற்பாரு அச்செயலைக் கெடுத்து நிற்பர்!''

'தெரிந்தது போல நடித்தல்' - என்பது இன்றியமையாத நீதி!

பலரும் இதைச் செய்ய நாம் காண்கிறோம்!

தெரிந்ததுபோல நடிப்பதால், அவரும் கெடுகிறார்! அச் செயலும் கெடுகிறது!

# 32

## Don't act!

The Intellect
Knowing a problem well
Consulting sages well
Will accomplish any deed well !
Welladay! the blockheads
Just act as if they know
Spoiling everything in toto !

*(22)*

### Terms expounded

[tumiya - beyond doubt
parai - drum
peyar vara - earning good name]

### Exposition

"The prodigies will consult at least twin sages apart from their own erudition over any matter before consummation. At last they will accomplish it without much ado.

But, alas! The dolts, who do not know the A B C of the deed, will imitate as if they apprehend everything! They will findly throw the spanner and have to throw up the cards!"

An important moral has been indicated here which is the need of the hour namely acting!

By so doing one is spoiling himself and the country putrefies!

## 33

### ஒன்றாகக் கூடுவீர் !

அறிவினர் பலரொன்றாய்க் கூடியகல்
பகைவர்களால் வெல்லுதலும் அரிதாம்
அறிவினரால் முடியாத காரியம்
ஒன்றுமில்லை ! எல்லாந்தான் முடியும் !
அறிவினரால் வினையெ முடிக்கலுறின்
உற்சாகந் தனைக்கொடுத்துக் கொள்வர் !
அறிவிலர் முடிக்கலுறின் இடையிலே
கெடுப்பதன்றி முடிப்பதும் இலரே !

(23)

### பொருட்குறிப்பு

[அகல் - அகன்ற
வினை - செயல்
முடிக்கலுறின் = முடிக்கல் + உறின் ; முடிக்க வேண்டுமாயின் ]

### விளக்கம்

"அறிவாளிகளால் ஆகாத செயல் ஏதுமில்லை!

ஆனால், அந்த அறிவாளிகள் தம்முள் ஒன்றுபட வேண்டும்!

அறிவாளிகள், ஒரு செயலை முடிக்கப் புகும்போது, இடையிடையே உற்சாகம் பெறுமாறு தம்மை ஊக்குவித்துக் கொள்வர்!

ஆனால், அறிவற்றோர்?

அறிவற்றோர், முடிக்கவேண்டிய செயலை, முடிக்கவிடாமல் இடையிலேயே கெடுத்துவிடுவர்!"

இவ்வாறு நல்ல புத்திமதிகளை அறைகிறார் சத்தியஞானி!

அறிவாளிகளால் ஆகாத செயல் ஒன்றுமில்லை என்று நம் புலவர் கூறுவது உளங்கொளத் தக்கது!

“அறிவுடையார் எல்லாம் உடையார்” என வள்ளுவர் சொன்ன வாக்கு நம் புலவருக்கு முன்னோடியாக இருந்திருக்கலாம்.

இதுவும் தற்போதைய நம் சமுதாயத்திற்கு ஏற்ற நீதியே!

அறிவாளிகள் அனைவரும் எங்கே ஒன்றுபடுகிறார்கள்?

இரு பிரிவுகளாக நின்று ஒரு சாரார் ‘உண்டு’ என்றால், மற்றொரு சாரார் வேண்டுமென்றே ‘இல்லை’ என்கிறார்களே! இதுதானே நடக்கிறது!

# 33

## Be United !

When the Learned are united
They will become invincible !
Tell me a deed which can't be achieved by them then ?
*The Sages will enthuse themselves*
Until the mission is accomplished !
But, the Doodles ?
They will spoil in between !

(23)

### Terms expounded

[akala - when setting out
viṉai - deed
muṭikkalurin = muṭikkal + uriṉ; when executing]

### Exposition

"Is there anything which can't be consummated by intellectual people?

If they are in one union, even adversaries can't near them!

The intellects often enthuse themselves until their goal is achieved.

But, the dolts?

They will only spoil in the middle!"

— Thus spake our bard.

This is a timely warning!

Intelligent mass never unite.

Often they begin to quarrel quite wantonly.

Dividing themselves into several parties, one party willingly negates another party!

"The intellectual will here all" — This Kural voice has an echo in our stanza above.

## 34

### இருகால்களால் நடக்க!

*அறிவனுடன் அறிஞன் காரியம் புரிதல்*
*இருகாலால் நடப்பதோ டொக்கும்!*
*அறிவுதான் போதாமல் இருந்தாலும் தேற்றியவர்*
*செம்மை யிலேழு டிப்பார்!*

அறிவன்றீ விலரோடு காரியம் புரிதல்
ஒருகாலன் இருள்நுழை வழியில்
வெறியனுட னேநடந்த கதையொக்கு மின்னம்
வெகுவித முமதி லிருக்கும்!

(24)

பொருட்குறிப்பு

[ஒருகாலன் - நொண்டி
வெறியன் - குடிகாரன்]

**விளக்கம்**

"அறிவாளிகள் இருவர் இணைந்து பணி செய்தால், அது சிறக்கும்! இரண்டு கால்களால் மனிதன் நடப்பதற்கு அது ஈடாகும்! செயல் கைகூடும்!

அங்கு, அறிவானது போதாமல் இருந்தாலும், அந்த அறிவைப் பிறவழியில், இருவரும் இணைந்து தேடிப் பெற்று, அதன்பின் அச்செயலை எளிதில் முடிப்பார்கள்!

இதைவிட்டு, அந்த அறிவாளி, இன்னொரு அறிவிலியுடன் கூட்டுச் சேர்ந்து செயலைச் செய்ய முற்படுவானாகில், அது நொண்டி ஒருவன் இருட்டில் வெறியன் ஒருவன் துணையுடன் நடப்பதை ஒக்கும்!

அப்படி இருட்டில் நடப்பதில் எவ்வளவோ கூத்துகள் நடக்கும்!"

# 34

## Use twin feet!

Two Intellects in collaboration
Can achieve wonder of wonders!

Making up the want of knowhow
They will execute quite swimmingly!
When a sage collaborates with a doodle?
It is like a lame in dark !
How can he walk with a tippler?
It is a jamboree, nothing but a jamboree !

**Terms expounded**

[Oru kālan - lame
veriyan - tippler]

**Exposition**

"When two learned individuals execute a deed, they can achieve it quite squarely.

Even if a want of knowhow is felt, they can easily fill up the gap!

On the contrary, how can a lame grope into a dark place along with a tippler?

It will only be mockery!"

# 35

## தந்திரம் வேண்டும் !

அறிவினர் பகைசெய்யு விகடமெல்லலாம்
உபாயத்தால் அறிந்துகொடு மிக்க
அறிவினர் கண்டபெரும் பகையெனும்
தந்திரங்கொண் டடங்கவே வெல்வர்

அறிவிலர் வெல்லவென்றால் உபாயம்
தந்திரவுத்தி இரண்டு மறியாமல்
அறிவிலர் மதங்கொண்டு வீணாகப்
பகைசெய்து தாங்களுமே கெடுவார் !

(25)

பொருட் குறிப்பு

[விகடம் - எதிர்ப்பு
கொடு - கொண்டு; இடைக்குறை]

**விளக்கம்**

"பகைவர்களின் எதிர்ப்பு முறைகளை, நயமாக, நுட்பமாக அறிந்துகொண்டு, அவற்றுக்கேற்ப உத்திகளைக் கையாண்டு, அப்பகைவர்களை வெல்வர், அறிவாளிகள்!

இப்படிப்பட்ட, வழிமுறை, கையாளும் திறன் என்ற இரண்டையும் அறியாமல், வெறியுடன், வீணாகப் பகைமையை வளர்த்துக்கொண்டு, அதனால் தாங்கள் இறுதியில் கெட்டுப் போவார்கள், அறிவற்றவர்கள்!"

நாடு என்பதன்கீழ்க் கூறப்படும் நீதியாக இது உள்ளது!

இருப்பினும், இல்வாழ்க்கை, நண்பர்களுடனான வாழ்க்கைகளுக்கும் இந்த நீதி பொருந்தவே செய்யும்!

# 35

## Knack is a must !

Delving deep into the obstruction
And the design of their foes
Will upstage them the prodigies ;
Not knowing the design sinister

Not following the nuance needed
The doodles will spoil
Both themselves as well as the deed
With only fierce enmity against the
opponents !
(25)

**Terms expounded**

[vikaṭam - obstruction
koṭu - koṇṭu; Loss of middle letter]

***Exposition***

Understanding the technicalities of the foes, the intelligents will oppose them quite tactfully and outshine them!

But the boobies, not knowing the art of their enemies, based on their enmity only, will fight with them only to embrace fall!

This ethics comes under a boad heading **country** *in* general.

But, at the same time, even *in* civil life, this holds water.

# 36

**விற்றரவது கொள் !**

*அறிவினர் தம்மைத்தாம் வித்தெனினும்*
*கொள்வார்கள் ஒப்புரவாம் ஒருமை !*
*அறிவிலர் தானேதான் ளரினுமதைக்*
*கொள்ளார் விகடமே கொன்வர் !*

அறிவினருக் கொப்புரவின் மிக்கநலந்
    தேவர்கள் தம்முலகத்தும் இல்லை !
அறிவினருக் கொப்புரவினால் வருவதே
    சிறப்பும் செல்வமும் நன்றாமே !

(26)

பொருட்குறிப்பு

[ஒப்புரவு - ஒற்றுமை]

**விளக்கம்**

"[4]அறிவு சான்ற பெரியோர்கள் தம்மை விற்றாவது, முயன்று, ஒற்றுமையை நிலைநாட்டுவார்கள்!

ஆனால், அறிவு அற்ற கடையோர் என்ன செய்வர்?

ஒற்றுமை அவர்களைத் தேடி வந்தாலும், அதை உதைத்துத் தள்ளிவிட்டுப் பிறருடன் பகைமையையே கொள்வர்!

அறிவாளிகளைப் பொறுத்தவரை ஒற்றுமையே சிறந்தது!

இதற்கு ஈடான நன்மை, தேவருலகிலும் இல்லை!

அறிவாளிகளுக்குச் செல்வம், சிறப்பு எல்லாம் ஒற்றுமையினால்தான் வரும்! இது திண்ணம்!"

# 36

## Even by selling you !

Sell themselves the Enlightened will
To achieve solidarity them amidst !
The Dunces will spurn Union
Even if it comes on its own !

The fruit of Union of Sages
Can't be found even in Devalokā !
Greatness as well as wealth
Is their solidarity for Learned !

(26)

**Terms expounded**

[oppuravu - union]

**Exposition**

"The intellectuals, even by selling them will achieve solidarity.

Only by union, they can accord wealth as well as fame.

On the contrary, the dullards will execrate union, even if it approaches on its own!

As the sages are concerned, they can't find the greatness of their unity even in the land of gods!"

தற்காலக் கருமநிலையுரைக்கின்றது - கவி 10

## 37

**நான்கு படிகள் !**

மேல்வருநற் கருமமெலாம் இளமைபெற
அறிந்தனரே யென்னினுமொன் றுண்டு !
சால்புடைய தற்காலக் கருமநிலை
அறியாதார்க் குச்சமர்த்த ரின்றாம் !

நாம்வரிலெ வரினுமது அறிதலொடு
தகநினைத் தன்மலைவு படித்ததனைப்
பால்வகுத்துச் சொல்லுதலுஞ் செய்கையு
நாலாகும் எனப்பொருள்தான் சொல்லினரே !

(1)

பொருட் குறிப்பு

[மலைவு - மலைப்பு
பால் - பிரிவு]

**விளக்கம்**

''பிற்காலத்தில் நமக்கு நடக்க இருப்பது முதலிய செயல்களை, நன்கு அறிந்து வைப்பது ஒருபுறம் இருக்கட்டும்!

தற்காலத்துச் செயலை நன்கு அறிந்து, அதைச் செவ்விதாய் முடிக்கத் தெரியாவிடில் என்ன பயன்?

ஒரு பணியினைச் செம்மையாக முடிக்கக் கீழ்வரும் நான்கு நிலைகள் வேண்டும்!:-

1. செயலை அறிந்து, அதுபற்றிச் சிந்திக்க வேண்டும்
2. மலைக்காமல், அதனைப் படித்தறிய வேண்டும்
3. வகுத்துச் சொல்லுதல் வேண்டும்
4. அத்தோடு விட்டுவிடாமல், செய்கையில் இறங்க வேண்டும்.''

படிப்படியாக ஒரு செயலை எவ்வாறு செய்து முடிக்க வேண்டும் என்று ஆசிரியர் விளக்குவது சிறப்பானது!

**மலைத்தல்** பற்றி உரைத்துள்ளது குறிப்பிடத்தக்கது. **''இளைத்தவனோடு போனாலும் போகலாம், மலைத்தவனோடு போகக்கூடாது''** என்ற பழமொழி இங்கு ஒப்பிடத்தக்கது.

# 37

## Four steps !

When pondering over future executions,
One must be clear with the Presence
Four ways to adopt for Present Execution
Thinking, Learning, Articulating and
Consummation !
(1)

### Terms expounded

[malaivu - staggering]
pāl - division]

### Exposition

"Let us, fending our skill in regard to our future deeds, ponder over the execution of present jobs !

There are **Four steps** to consummate any action; They are :-

1. Knowing the job thoroughly, he should ponder over it.
2. Without exclaiming at it, he should learn the peripheral things.
3. He should be able to articulate the deed classifying finely.
4. He must plunge into action.

This methodical approach of executive's guidance is conspicuous.

The notion of *Astonishment* uttered here is noteworthy. There is an adage in Tamil : "We can go along with a week; but never with a thunderstruck!"

# 38

## அணு விலக மலை விலகும் !

அறிதலொடு நான்கினுமே பொறைகருவும் குணநயமும்
நான்குமே பொருந்த
அறிதலாம் அணுவிலக மலைவிலகும் அணுக்கூட
மலைகூடும் அதுவும்
நெறிதருகா ரியச்சொற்கள் பலப்பல வாக
நிகழ்த்தல்தனக் கிழிவாம் !
நெறிதருகா ரியமறிந்த சொல்லொன்றே எய்துவிது
நிகழ்த்துமுறை அறிமின் !

(2)

### பொருட்குறிப்பு

[பொறை - பொறுமை
கரு - கருக்கிடை
குணநயம் - வன்மை மென்மை]

### விளக்கம்

"முந்தைய பாடலில் சொன்ன நான்கு வழிகளை அறிவதோடு, பொறுமை, அக்கறை, செயலின் வன்மை மென்மை அறிதல் ஆகியன கொண்டு செயலை நிறைவேற்றுக!

அப்படிச்செய்யும்போது, நாம் அறியவேண்டியது யாதெனில் 'சிறியது' என்று எதையும் கவனியாது இருக்கக்கூடாது! ஏனெனில், அணு விலகி விட்டால், பின்னால் உள்ள மலை கூட விலகலாம்! அணுவானது கைகூடி விட்டால், பின்னே வரும் மலைகூடக் கைகூடிவிடலாம்!

*இப்படிப் புரியும்போது, அவைபற்றியெல்லாம் பிறரிடம் தேவையற்ற சொற்பொழிவுகளை ஆற்றிக்கொண்டு இருக்கக் கூடாது! அது இழிவு!*

*பல சொற்கள் செய்யவேண்டிய செயலை, ஒரே ஒரு சொல் செய்து தந்துவிடும்!" - இவை புலவரின் நீதிகள்.*

**அணுவிலக மலைவிலகும், அணுக்கூட மலைகூடும்** - *என்ற நீதி மிகச் சிறந்த அனுபவ நீதி!*

# 38

## When mole-hill is removed, mountain can be removed after !

Execute your deed
With Forbearance and Sincerity,
Weighing its Weight duly !
Remember when a mole hill removed
Full mountain can be removed following
When a mole-hill achieved
Full mountain can be achieved following !
Never verbose be !
A single term may achieve the lot whole !
(2)

### Terms expounded

[porai - forbearance
karu - meticulous
kaṉanayam - prosperity and adversity]

### Exposition

"The four steps mentioned whileom apart, he should plunge into action weighing the pros and cons and adopting forbearance and sincerity.

In so executing, he should understand that if a sliver gives way, then after that, a huge mountain will also give way. Likewise, if anything little is consummated first, then following that, great wonders can be achieved!

But don't resort to verbosity!

Even a single word can fetch wonder of wonders!" - Thus recounted our poet.

In this hymn, a great experience has been penned by our bard viz, "If sliver gives way, then a full mountain gives way, following; If a splinter is earned than a whole wealth can be annexed, following!"

# 39

## முயற்சி எப்படி இருக்க வேண்டும் ?

அடிநாளில் ஆய்ந்தெண்ணிக் கற்றுணர்ந்து பழகியநற்
    கருமங்கள் செயுங்கால்
இடங்கால மறிதலொடு சார்பகை அறிதலுமே
    வேதையுந் தானறிதல்
கெடுதிவரி னுங்காத்து மறதியாஞ் சோர்வின்றி
    நிறைகுணத்தி னாதி
முடிவென்னும் பயன்கண்டு விரைவதாந் தற்கால
    முயற்சியது தானே !

(4)

### பொருட்குறிப்பு

[செயுங்கால் - செய்யும்போது; இடைக்குறை
அறிதலுமேவேதையும் = அறிதலுமே + ஏதையும்
ஏது - காரணம்]

### விளக்கம்

"நன்றாக ஆராய்ந்து, ஒரு செயலைப் பற்றி நன்கு படித்தறிந்து, இறுதியில் ஒரு வினையை மேற்கொள்ளப் போகும்போது என்னென்ன கவனிக்க வேண்டும்?

இடத்தையும் காலத்தையும் அறிந்து எச்செயலையும் மேற்கொள்ள வேண்டும்.

இவற்றுடன், தனக்குச் சார்பானவர்கள் யார் யார்? எதிரிகள் யார் யார்? என்ற வகையையும் நன்கு அறிந்துகொள்ளவேண்டும்.

இதன் பின்பு, நல்ல குணத்தானாகத் தான் இருத்துகொண்டு, மறதி என்ற தீங்கை விட்டுவிட்டு, செயலின் முடிவை நோக்கி, விரைவாக ஒரு செயலைச் செய்து முடிக்கவேண்டும்!"

காலமறிதல், இடமறிதல் முதலிய திருக்குறள் நீதிகளை இங்கு நினைக்கலாம்.

# 39

## Way of endeavour !

When plunging into Action
After delving deep into the deed
By Studying Understanding and Pondering
One must take stock of Time and Place !
Along with Reason, of course !
Accomplish quickly after that
Fending your enemy of Forgetting !

(4)

### Terms expounded

[ceyunkāl - while executing; **vanishing of intermediate letter**

aritalumēvētaiyum = aritalumē + ētaiyum
ētu - reason]

### Exposition

"A person must take stock of situation, time and place when attempting to execute ofter studying the case deeply with its pross and cons. etc,

While so doing he must enlist his oppoments as well as comrades.

He must, however, remain pure minded.

Spurning the foe of his own lethargy and forgetfulness, he should consummate the deed in question."

A few chapters in Thirukkuraḷ like Expedient Time, Expedient Place etc, have been elegantly grasped by our poet to knit the above stanza.

## 40

### சலிப்பு கூடாது!

கருமத்தின் முன்னெண்ணம் மிக்கவரா யிருந்து
கருமங்கள் வருங்காலங்
கருமங்கள் நிமிடத்தில் அறிந்துமுடிப் பவர்களே
கருமப்பா டில்லாரங்
கருமத்திற் சற்றேனுஞ் சலிப்பின்றிச் செய்பவர்க்கே
இன்பமது நல்கும் !
கருமநுட்பம் அறிந்தோரைக் கொடுத்தேனுங்
கொளல்வேண்டும்
நண்புடைமை தானே !

பொருட்குறிப்பு

[கருமம் - செயல்
கருமப்பாடு - வினைத்திட்பம்]

விளக்கம்

"ஒரு செயலை மேற்கொள்ளு முன் நன்கு ஆராய்ந்து, அதைச் சலிப்பின்றிச் செய்து முடித்தால்தான், இன்பம் பொங்கும்!

இத்தகு செயற்பாட்டு வன்மை மிக்கவர் ஒருவர் எனத் தெரிந்தால். அவரது நட்பைப் பொருள் கொடுத்தேனும் ஈட்டிக் கொள்ள வேண்டும்!

இப்படி இலாது, ஒரு நிமிட நேரத்தில் அரைகுறையாக அச்செயலைச் சிந்தித்துச் செயற்படுத்தினால், அச்செயல் பழுதாகும்! அவரும் கருமப்பாடில்லாதவர் என்றே ஆவார்!

சலிப்பில்லாது ஒரு செயலில் முழு மூச்சுடன் பாடுபட வேண்டும் என்பது ஒரு சிறந்த அனுபவ மொழி ஆகும்!

# 40

## Indefatigableness is needed

Never decide a course in a giffy
Meticulous care and study is a must !
He will become an inefficient otherwise !
Happiness will be his property
Who Consummates tirelessly !
Friendship of such an executive
Should be attained at costs all

### Terms Expounded

[karumam - deed
karumappāṭu - art of achieving]

### Exposition

"In consummating any desired jab, he should work tirelessly, after weighing the problem to its root.

He should not attain a decisive move in a giffy !

He will accord bliss immeasurably if he selects such a factful path.

Otherwise he earns only a bad name - an unhandy!

The frienship of tactful and clever person is invaluable; it should be earned at any cost!"

## 41

### திருந்தச் செய் !

நுண்ணியதாஞ் சொற்செயலும் அனுபவமாம் பழக்கத்தால்
அஃதறிந்து கோடல்
கண்ணியதோர் ஒருவனது குறிப்பறிதல் அவன்சொல்லின்
பாவநிலை அறிதல்
எண்ணுவது வருவதற்கு முன்னாகும் வந்தபின்னர்
எண்ணுவதும் இழுக்காம்!
பண்ணியதோர் தன்சொல்லை வன்மையொரு சொல்லல்
செய்கைதிருந்தச் செய்வதுவே!

பொருட்குறிப்பு

[கோடல் - கொள்ளுதல்
பாவநிலை - உணர்வு நிலை]

விளக்கம்

"சொல்லைச் சொல்லுதல், ஒரு செயலைச் செய்தல் ஆகிய இரண்டையும் நமது அனுபவத்தால் செப்பம் செய்து கொள்ளல் வேண்டும்!

மற்றவன் எந்த மனநிலையில் உள்ளான் என்பதைக் குறிப்பால் உணர்ந்துகொள்ள வேண்டும்; அவன் சொல்லுகின்ற சொல்லின் உணர்ச்சியையும் நன்கு விளங்கிக் கொள்ளவேண்டும்!

செய்யப் போகுமுன், ஒரு செயல் பற்றி நன்கு எண்ணிக் கொள்ளவேண்டும்; செய்து முடித்தபின் எண்ணிப் பார்ப்பது இழிவானது!

நாம் சொல்லும் ஒவ்வொரு சொல்லையும் வலிமையுடன் சொல்ல வேண்டும்!

நாம் செய்யும் ஒவ்வொரு செயலையும் திருத்தமுறச் செய்து முடிக்கவேண்டும்!" என்பன புலவரின் கருத்துகள்.

திருக்குறட் கருத்தை இங்கும் காண்கிறோம்.

# 41

## Do it perfectly

Work your word and deed
In the factory of Experience!
Grasp the feeling of words and person
Of everybody you transact with

Never think after a job
Pondering after the execution
Is infamy to the exeuctor !
Emphatically speak words always
Always consummate a deed rightly !

(6)

**Terms expounded**

[kōṭal - to undertake
bhāvanilai - feeling]

**Exposition**

Making use of our experience we must mend our word and deedl

We must understand the heart - throb of our fellowmen *as well as their words.*

What is the use of lamenting over spilt milk ?

So, thinking beforehand is a must.

Whatever we utter, we must utter it emphatically.

Whatever we *do we must execute* it squarely?"

Here also, we have the feast of Thirukkural philosophy.

## 42

### எத்தனையோ செயல்கள் !

மண்ணிவரும் ஓர்தினத்தில் பலபலவாங் கருமங்கள்
வருவதுவும் உண்டாம் !
மின்னதாம் எனவகுத்து நூலிலே முழுதுந்தான்
இசைக்கவும் ஒன்னாதாம் !

சொன்னதனைக் கொண்டுமற்று உளவெலாம் அறிதலெனச்
சொன்னார் மேலோர் !
இன்னமின்னம் இவர்வாதம் கருத்துளவே யாங்கருமத்
தியல்பதுவும் தானே !

(7)

பொருட்குறிப்பு

[கருமம் - செயல்
ஒன்னாது - இயலாது]

விளக்கம்

"ஒரே நாளில் பலவிதமான செயல்களை நாம் செய்யவேண்டி வரும்!

அப்படி வரக்கூடிய செயல்கள் இத்தனை என்று பட்டியல் போட்டு, ஒவ்வொன்றையும் "இப்படிச்செய்" என்று கூறமுடியுமா? முடியாது!

ஆகவே, ஏதாவது ஒன்றுக்குக் கூறியதை அடிப்படையாக வைத்துக்கொண்டு, பிற எல்லாவற்றுக்கும் முடிவுகளை எய்த வேண்டும்!"

# 42

## Countless are deeds !

Innumerable are the jobs
Undertake we have to daily !
Impossible it is surely
To pronounce ethics for all squarely !
Having one precedence as told by prodigies
Walk we have to throughout our life !

(7)

**Terms expounded**

[karumam - deed
onnātu - impossible]

**Exposition**

"On a particular day, we have to perform countless activities.

So, it is impossible to render guidance for each and everything in this book.

Hence, setting an expedient example set by sages for guidance, remaining decisions should be carved out using wit and all!"

# 43

## தகவு தோன்றும் !

தற்காலக் கருமநிலை உண்டென்று நினையார்க்குப்
    பண்படா தாகும்
தற்காலக் கருமநிலை உண்டென்று நினைப்பவர்க்கே
    பண்படுவ தாகும்
தற்காலக் கருமம் பகுந்தறியப் பிரியாத
    சற்கரும மெல்லாம்
தற்காலக் கருமநிலை பின்னுமொருக் காலுன்னத்
    தகவெல்லாம் தோன்றும் !

(8)

பொருட்குறிப்பு

[சற்கருமம் - நற்செயல்
தகவு - தெளிவு]

### விளக்கம்

"நாம் செய்யவேண்டிய செயல்கள் இன்னவை என்று அறிபவர்களுக்கே, அச்செயல்களை முடிக்கும் திறனும் ஏற்படும்!

செயல் இன்னது என்று அறிய முடியாதார்க்கு, அச்செயல் கடினமானதாக ஆகிப்போகும்!

பல கூறுகளாக உள்ள நற்செயலைப் பிரித்துப் பிரித்துக் காணல் வேண்டும்; அப்போதுதான், அதில் தெளிவு ஏற்படும்"

## 43

### For sagacity !

Activities bow down with folded hands
To those who perceive well them !
Actions will not control under
To those who perceive can't !
Time and again contemplate on
Sagacity will be obtained to tackle !

(8)

### Terms expounded

[carkarumam - good activity
takavu - prudence]

### Exposition

"Firstly, behold your activity to its root!

Then only, it may be possible to perform it.

For those who do not perceive action, any deed will become cumbersome.

When bifurcating activities, we get vim to consummate it!".

# 44

## இழந்தார் கோடி !

அறிவினது கருவைவிட்டால் அழிந்திடுமாம் கருமத்தின்
கருக்கள் எல்லாம் !
அறிவதுசொற் பாவநிலை செயற்பாவ நிலையறிந்தால்
அதிகநலம் ஆகும் !
நெறிதருநற் கருமநிலை தனையடைந்தே இகபரமும்
அடைந்தாருங் கோடி !
நெறிதருநற் கருமநிலை அறியாமல் இழந்தாரும்
அதுகோடி தானே !

(௯)

### பொருட்குறிப்பு

[இகபரம் - இவ்வுலகும் அவ்வுலகும்]

### விளக்கம்

"அறிவைப் பயன்படுத்தினால், எந்தச் செயலையும் வென்று முடித்திடலாம்!

பொதுவாக, சொல்லின் உணர்ச்சி, செயலின் தன்மை ஆகியவற்றை உணர்ந்து செயல்படின், நன்மை அதிகம் கிட்டும்!

நல்ல செயல்களைச் செய்து இவ்வுலகிலும் மேலுலகிலும் நன்மை பெற்றோர் கோடி கோடி!

இந்த வழியை அறியாது, நல்ல செயல்களைச் செய்யாது, தீச்செயல்களைப் புரிந்து, இவற்றைஇழந்தோரும் கோடி கோடி!".

# 44

## Crores lost !

Use the weapon of Erudition
To pulverise any act !

Perceiving the word and deed fully
Reap the benefits increasingly !
By resorting to Beneficence
Crores and crores obtained Bliss
Here and Hereafter !
By resorting to Vileness
Crores and crores lost these !

(9)

**Terms expounded**

[ikaparam - world here and hereafter]

**Exposition**

"Batter any job, using your wits!

The inner meaning of word as well as the inner nature of deed should be grasped first.

When so executing, any problem will disappear like a dew before sun!

Doing virtuous proceedings, will fetch you goodly life here and hereafter! Crores of people have attained so.

Engaging in vile transactions, crores have lost it!"

## 45

### கேள்வி வேண்டும் !

*கேள்வியினும் பிறர்கேள்வி தன்னிடத்துந் தற்காலக்*
*கருமநிலை வேண்டும் !*
*வாள்வினையைத் தருகின்ற விடத்தினுமாம் வாணிபஞ்செய்*
*இடத்தினுக்கு மாகும்*

ஆள்வினையைக் கொளுகிடத்தும் வல்லரல்லார் ஆள்வினை செயும்
இடத்தும் ஆகும்!
வாள்வினைதந் திடுகின்ற தற்காலக் கருமநிலை
உறமதிக்குங் காலே!

(10)

பொருட்குறிப்பு

[வாள்வினை - போர் செய்தல்
கொளுமிடம் - கொள்ளுமிடம்
ஆள்வினை - வினையாட்சி; போலி]

விளக்கம்

"தற்போது செய்து முடிக்கவேண்டிய தற்காலச் செயல் எதற்கும் கேள்வி அறிவு தேவை!

நமக்கு உள்ள கேள்வி அறிவு மட்டும் போதாது! பிறருடைய கேள்வி அறிவையும் நன்கு பயன்படுத்திக் கொள்ளவேண்டும்!

இந்த இரு வகை அறிவுகளையும் சேர்த்துக் கொண்டுதான், பொதுவாக வினைசெய்யும் இடத்தும், போர் செய்யுமிடத்தும், வாணிகம் செய்யுமிடத்தும் வெற்றிபெற முடியும்!"

# 45

## Erudition by hearkening

Pile up Erudition by Hearkening
Throug yourself and other as well!
No matter the field
May be warfare, busines, general administration
Intellect through Hearkening is a must!

(10)

### Terms expounded

[vāḷvinai - warfare
koḷumiṭam - employing place
āḷvinai - doing execution; natural order reversed]

### Exposition

"Learning through listening to others is a must.

Apart from this, others' knowledge obtained through hearkening should be utilised to consummate any act on hand.

These two combined is a criterion for the execution of any job, be it a war, a business or a common transaction"

## 46

### நீதியினியல்பு

**நீதியினது தொகையும் பாதமுமுரைக்கின்றது - கவி 12**

**நன்மை தருவன நான்கு!**

அருநீதி மானிடர்க்கு நன்மைதரு வதுநான்காம்
அதன்வகை ஏதென்னில்
உரியவிவ காரமெனும் கண்டிப்பும் தருமந்தான்
உண்மையறி ஞானம்
இருமைதரும் இவைநான்கும் நீதிக்கால் எனவுமிது
கடவுள்வடி வென்பார்
ஒருமைதரும் சாமபேதந் தானதண் டமிவை
கண்டிப்பில் அடங்கும்!

(1)

### பொருட்குறிப்பு

[அறிஞானம் - வினைத்தொகை
நீதிக்கால் - நீதியின் பிரிவு
சாம - சமாதானம்
பேத - பிரித்தல்
தான - கொடுத்தல்
தண்டம் - தண்டித்தல்]

### விளக்கம்

"மானிடனுக்கு நன்மை பயக்க வல்லன நான்கு!
அவை யாவை ?
1. கண்டிப்பு
2. தருமம்
3. உண்மை
4. ஞானம் - என்பனவே!
இந்த நான்கும் நீதியின் பிரிவுகள்!

இவை தவிர,
1. சாம
2. பேத
3. தான
4. தண்டம் - என நான்கு கூறுகிறார்களே, அவை?
அவை நான்கும் கண்டிப்பு என்பதில் அடங்கும்!"

# 46

## Beneficent four !

Beneficent four are there for mankind !
Discipline, Munificence, Veracity and Erudition!
These hold good for all fields
Be it war, business or administration !

(1)

**Terms expounded**

[ari jnānam - Elliptical compound
nītikkāl - branch of moral
cāma - compromise
bēta - dividing
tāṉa - gift
taṉṭam - punishment]

**Exposition**

"There are four vital divisions that fetch benefits to mankind!

They are :-

1. Sticking to discipline
2. Donating munificently
3. Veracity
4. Intellect

These four are branches of Ethics.

The following four will come under the first category saw whileom :-

1. Compromise
2. Divide and Rule policy
3. Grant
4. Scourging

## 47

### கட்டுப்பாடு தேவை !

கண்டிப்பொன் றிருந்திடத் திறல்தருமந் தானிருக்கும்
அதையின்றி யிலேயிருக்காக்
கண்டிப்பொன் றிருந்திடத்தில் உண்மையது இருக்கும்
அதையின்றி யிலேயிருக்காக்

கண்டிப்பொன் றிருந்திடத்தில் ஞானஒளி இருக்குமதை
இன்றியிலே யிருக்காக்
கண்டிப்பு முதலாக இதுநாலும் ஒன்றையொன்று
பிரியாமல் இருக்கும்!

(2)

பொருட் குறிப்பு

[கண்டிப்பு - கட்டுப்பாடு
இன்றியிலே - இல்லாமலே]

**விளக்கம்**

"கட்டுப்பாடு இருக்கும் இடத்தில்தான் தருமம் தழைக்கும்!

கட்டுப்பாடு இன்றேல், தருமம் இராது!

கண்டிப்பு எனும் கட்டுப்பாடு இருந்தால்தான், உண்மை ஓங்கும்!

கட்டுப்பாடு இன்றேல், உண்மை வாழாது!

அறிவாகிய ஒளி வேண்டும் என்றாலும் கட்டுப்பாடே தேவை!

கண்டிப்பு எனும் கட்டுப்பாடு, தருமம், உண்மை, அறிவுஒளி என்ற இந்த நான்கும் ஒன்றோடொன்று பின்னிப் பிணைந்தவை; பிரியாதவை!".

# 47

## Discipline that counts !

No place for Virtuosity
In the obsence of Discipline !
No room for Truth
While execrating Discipline !

No hope for Wisdom
While spurning Discipline !
Discipline, Virtuosity, Truth and Wisdom
Go hand in hand always !

(2)

**Terms expounded**

[kanṭippu - discipline
iuriyilē - without that]

**Exposition**

"Equity will flourish only at place of Order!

Truth can be expected only at places of Discipline!

Without Discipline, there is no hope for Erudition!

Succinctly, Discipline, Truth, Equity aud Wisdom are always inseparable."

# 48

## *நீதிப் பெருமை !*

*நீதிப் பெருமையை அறிவோர் அறிவர்*
*நீதியுமிறி யுமவர்பெரு மைதன்னை !*
*நீதிதான் அறிவின ருக்கு உறவாகும்*
*நீதிக்கே அறிவினரும் உறவாம் !*
*நீதிதான் அறிவினரைத் தூங்காமலே எழுப்பும்*
*அறிவினர் நீதி எழுப்பும் !*
*நீதிதான் புண்ணி யமாங்குன் றம்போல்*
*அழியாத நெடுஞ்செல்வ மவர்க்கே !*

(3)

பொருட் குறிப்பு

[குன்றம் - குன்று; அம்முச்சாரியை பெற்றது]

**விளக்கம்**

"அறிவுள்ளவர்களே நீதியின் பெருமைகளை உணர்வார்கள்!

நீதிக்கும், அறிவாளிகளின் பெருமை நன்கு விளங்கும்!

அப்படிப்பட்ட நீதியானது, அறிவு உள்ளவர்களுக்கு உறவுக் காரன் போல ஆகும்!

நீதிக்கும், அறிவாளியானவன், ஓர் உறவினன் போல ஆகும்!

நீதியுள்ள நெஞ்சு உடையவர்களுக்கு, நீதி தப்பினால் தூக்கம் வராது!

அறிவாளிகளும் நீதியைத் தூங்கவிடாது, தட்டி எழுப்பிவிடுவர்!

அறிவு பெற்ற அறிஞர்களுக்கு நீதியானது ஒரு மலைபோன்ற பெரிய செல்வம் ஆகும்!"

# 48

## Nobleness of Equity

The Enlightened grasp the excellence of Morality!
So too is the case of Morality!
Relative is Ethics to Wise
Relative is Wise to Ethics!
Derailed in Morality, won't sleep the wise
And the Wise won't allow the Morality to sleep

A mount of wealth is Morality
To the Enlightened always !

(3)

**Terms expounded**

[kuṉram - hill; 'am' suffix attained as an euphonic extension]

**Exposition**

"Only the erudite understand the excellence of Justness!

Likewise, the Morality itself knows well the wise!

In fact, Justice is a relative to the erudite and vise versa!

The enlightened won't get sleep, if they happen to wink at justice.

In the same manner, the intellect will not allow morality to sleep!

Tersely, moral way is a wealth to the wise!"

# 49

## நீதிக்கு உறுப்புகள் !

நீதியொன் றெனினும்அதன் உறுப்பாய் கண்டிப்பு
முதலியநா லுந்தான்
ஓதுபா வத்தாலே வேறுபடும் பாலொன்றே
எனினுமதில் தயிராமோ?
மீதுநவ நீதிநெய் எனநாலும் பாவத்தால்
வேறுபடும் போலும் !

கோதுகளும் பொன்றெனினும் பாகுவெல்லஞ் சீனியொடு
கற்கண்டே போலும் !

(4)

பொருட்குறிப்பு

*[பாவத்தால் - தன்மையால்]*

விளக்கம்

"நீதி என்பது ஒன்றுதான் என்றாலும், அதில் **கண்டிப்பு** முதலிய நான்கு பிரிவுகள் உள்ளன!

பால் என்பது ஒன்றுதான்! ஆனால், அதன் மூலம் பெறக் **கூடிய** வெண்ணெய், நெய், தயிர் எல்லாம் வேறு வேறு அல்லவா?

கரும்பு என்பது ஒன்றுதான்! ஆனால் அதன் மூலம் பெறக் கூடிய வெல்லம், சீனி, கற்கண்டு என்பவை வேறு வேறு அல்லவா?

இவற்றைப் போலத்தான் நீதியும்!"

# 49

## Morality has divisions !

There are divisions four for Ethies like
Discipline etc.,
Milk is one but has offshoots four !
Sugarcane is one, but has disjunctions four !
Sugarcane, jaggary, sugar and sugar-candy !

*(4)*

**Terms expounded**

[bhāvattāl - in its nature]

### Exposition

"It appears as if morality is a one lot; but it has four branches as discipline etc.

Milk is one! But we have four - milk, butter, ghee and curd - from it !

Sugar cane is one! But we have four - sugarcane jaggery, sugar and sugar-candy - from it!"

## 50

### நீசர்களே !

கண்டிப்பு முதல்நாலும் ஒன்றிலொன்று சிலமாறிக்
கலந்துவரி னுந்தான்
கண்டிப்பு முதல்நாலும் நாற்பிரிவாய் நின்றே
கருதும்இடு குறியை
கண்டிப்பு முதல்நாலும் கருந்தினந்தம் பெருக்கால்
கலக்குமுல கத்தில்
கண்டிப்பு முதல்நாலும் கற்றவரே குணமுயரக்
கல்லார் நீசர்களே ! (5)

### பொருட்குறிப்பு

[குறியை - இலக்கை
கலக்குமுலகத்தில் = கலக்கும் + உலகத்தில்]

### விளக்கம்

"கட்டுப்பாடு முதல், முன்னே ஓதப்பட்ட, நான்கும் தனித் தனியாகவும் கலந்தும் வரும்! அவரவர் கருத்துக்கு ஏற்ப இவ்வாறு நிகழும்! அப்படிக் கலந்தாலும், அந்த நான்கால்தான் ஒருவன் நினைத்த இலக்கை அடைய முடியும்! அதுமட்டுமல்ல! அப்படிப் பட்டவர்களே குணமுள்ளோராகவும் இருப்பர்! மற்றோரல்லாம் நீசர்களாகவே ஆவார்கள்!"

# 50

## Contemptibles !

Discipline and the three recounted
Will mingle with one another!
Depends upon it the nature of man!
But secures target surely!
Disposition of man is elevated
Only due to four these!

(5)

### Terms expounded

[kuriyai - that target
kalakkumulakattil = kalakkum + ulakattil]

### Exposition

"The discipline etc four delineated before, will come jointly or severally as per the nature of individual soul.

Though mixed, only such morality will attain one's aim!

And only such souls are lofty and elevated! The rest are wile!"

# 51

## நீதிக்கு உயிர் !

நீதியார் இட்டாந்திர அனுமானப் பிரமாணம்
இரண்டினையும் நிறுத்தே
நீதிதனைச் சாதனங்கள் செய்திடுவார் ! நீதிக்கோர்
இழிவுவரும் என்னில்

நீதிதனை நிலைகாப்பர் ! ஊணுறக்கம் நீக்கித்தம்
உயிரேனும் கொடுத்து
நீதிதனைக் காப்போரைப் பலமணுகும் காலமொன்று
நெருக்காதா மன்றே !

## பொருட்குறிப்பு

[இட்டாந்திரம் - சான்று
அனுமானப் பிரமாணம் - செயலால் காரணத்தைக் தெளிதல்]

### விளக்கம்

"நீதியின் அடிப்படையிலான சான்று மற்றும் நடந்த செயலைக் கொண்டு பெறப்படும் உண்மை என்ற இந்த இரண்டையும் சீர் தூக்கிப் பார்த்த பின்பே, நீதியைச் செயல்படுத்துவர் மேலோர்!

நீதிக்கு இழிவு வருமானால், அதனை முன்னின்று காப்பர்!

அப்போது, உணவு, உறக்கம் முதலியவற்றையும் துறந்து, உயிரைக்கூடக் கொடுத்து, நீதியைக் காப்பர்!

அப்படி நீதிகாப்பரிடத்திலே, எமன்கூட அணுகமாட்டான்!"

# 51

## Die for Morality !

The Enlightened before enforcing Ethics
Will weigh both Proof and Inference !
They will die for Ethics
When Morality is in jeopardy
They will lose their food and sleep !
Death will not near such even !

### Terms expounded

[tiṭṭāntiram - proof
aṉumāṉappiramāṇam - inference]

### Exposition

"The wise will always plunge into action after weighing the proof and correct inference!

They will *protect* ethics at all costs, even at the cost of their life!

They will forego their sleep and food for the sake of morality!

At the *sight* of such learned personalities, even Death will wince!"

## 52

### எழிலாகும் நீதி!

*ஆதரவா லியபசுவுக் கழகா கும்பால்!*
*அறிவுக் கழகுகற் பனையாம்!*
*மாதருக்கே கற்பழ காம்அனு போகங்*
*களுக்குச் செல்வமே யழகாம்!*
*ஏதுமெல்லா உலகுக்கு முற்றி முணர்ந்திடும்*
*கடவுள்ஒரு வனுமே அழகாம்!*
*ஏதுபுண்ணி யங்களா வருதன் மைகளுக்(கு)*
*எல்லாஎழி லாகும் நீதி!*

(7)

பொருட்குறிப்பு

*[எழிலாகும் - அழகாகும்]*

### விளக்கம்

"பசுவுக்கு அழகு தருவது பால்!

அறிவுக்கு அழகு நல்குவது கற்பனை!

பெண்ணுக்கு அழகை அளிப்பது கற்பு!

துய்ப்பதற்கு அழகு தருவது செல்வம்!

உலகத்திற்கு அழகை நல்குவது கடவுள்!

புண்ணியத்திற்கு அழகு நீதியே!"

# 52

## Supreme beauty is ethics !

It is milk that bestows beauty to cow !
It is modesty that renders elegance to woman !
It is God that furnishes loftiness to world !
It is imagination that given uplift to wisdom !
It is wealth that bestows majesty to revelry !
It is Ethics that renders beauty to meritorious deeds ;
(7)

### Terms expounded

[eḻilākum - become beauty]

### Exposition

"Milk gives beauty to cow !

Imagination gives nicety to knowledge!

Chastity donates elegance to woman!

God is life to world!

Wealth is 'jewel' to enjoyment!

Morality is an ornament to meritorious accomplishments!'

# 53

## நூற்களுக்கே அழகு !

நீதியெல்லா நூற்களுக்கும் அழகாகும்
　நெறிக்குநிறை அழகதே ஆகும் !
நீதியது நுழையாத நூலில்லை !
　நெறிகளும் ஒன்றில்லை நிசமாகும் !
நீதிநுழை யாநூலில் அநீதி
　நுழைந்திருக்கு நெறிக்கும் அதுவேயாம் !
நீதிதான் பாவமெனும் இருளுக்கோர்
　நீண்டநெடு விளக்காங்கைக் கொளுநீரே !

(8)

### பொருட்குறிப்பு

[நெறி - ஒழுக்கம்
நிறை - நீதி]

### விளக்கம்

"எல்லா வகையான நூற்களுக்கும் நீதி என்பது ஓர் அழகையே தரும்! ஒழுக்கத்திற்கும் நீதி மெருகூட்டும்! நீதி என்பது இல்லாத நூலே இல்லை எனலாம்! அதே போல, ஒழுக்கம் இல்லாத நூலும் இல்லை என்றே சொல்லலாம்!

நீதியானது போற்றப்படாத நூலில், அநீதிக்கே இடமிருக்கும்!

ஒழுக்கமானது போற்றப்படாத நூலிலும், அப்படியே, தீயொழுக்கமே இருக்கும்!

நீதி என்பது என்ன?

பாவம் எனும் இருளைப் போக்கவல்ல ஒரு நல்ல கைவிளக்கு!”

## 53

### Fineness to treatises!

It is comeliness for all books to have morality!
So too is the case of discipline to have ethics
There is no book without giving place for justness
There is no treatise without room for decorum
If there is no place for equity in a book
Then there is place for immorality in it!
When there is no hope for virtue in a book
It will be a place for vileness!
Equity is a torch light
To traverse the darkness of sin!

(8)

#### Terms expounded

[neri - discipline
nirai - equity]

#### Exposition

"For all kinds of books, justice will donate only comeliness! For discipline also, it will increase fineness!

There is no book sans justness!

In the same manner there is no book sans discipline!

If equity is not appreciated in a book, it means that it encourages only vileness.

In the same manner, decorum is not encouraged in a book, it implies that it favours only vice!

What is a equity?

It is a lantern to eschew sin!"

## 54

### மாங்கன்று வளர்த்தல் போல !

நீதியினைத் திருத்தல்தான் தேமாவின் கன்றதனை
வளர்த்தல் போலும் !
கோதிலாக் குட்டிமத்தைச் சுண்ணஞ்சா றதினாலே
குயிற்றல் போலும் !
நீதியின்மை தனைத்திருத்தல் கனிநச்சி நச்சுதனை
வளர்த்தலே போலும்!
தீதுறுதா ளென்னொடுங் குப்பைதனை மெழுகலும்
ஒன்று ஒக்கும் !

(9)

பொருட்குறிப்பு

[திருத்தல் - வளர்த்தல்
தேமா - இனிப்புமா
குட்டிமம் - தளம்
சுண்ணம் - சுண்ணாம்பு
குயிற்றல் - பதித்தல்
நச்சி - விரும்பி]

விளக்கம்

இனிப்பான மாங்கனியைத் தருகின்ற ஒரு மாமரத்தின் கன்றை வளர்ப்பது எப்படியோ அப்படிப்பட்டது நீதியை வளர்ப்பது!

நல்லதொரு தளத்தைச் சுண்ணாம்பு இட்டுச் செம்மைப் படுத்துவது போல ஆகும்!

ஆனால், அநீதியை வளர்த்தால்?

அது, நஞ்சு மரத்தை வளர்ப்பதைப்போல ஆகும்!

அச்செயலானது, புழுதியையும் குப்பையையும் கலந்து ஒரு தளத்தை மெழுகிவிட்டது போல ஆகும்!"

# 54

## Like growing a mango-plant !

To develop Ethics is like growing a sweet mango-plant !
It is like besmarcing a floor with lime !
To toster immorality is like growing a poisonous tree !
It is like coating a floor with dust and litter !

(9)

### Terms expounded

[tiruttal - growing
temā - sweet mango
kuṭṭimum - floor
cuṇṇam - lime
kuyirral - setting the floor
nacci - liking]

### Exposition

"To nurture justness is tantamount to grow a sweet mango-plant!

It is like making a floor with lime!

But fostering vileness is only like growing a poisonous tree!

It is like coating a floor with dust and litter!"

## 55

### இருட்டில் தடவக் கூடாது!

அறியவரும் உதையந்தான் கண்டவர்கள்
நன்மையிது தீமையிது என்ன
அறிவார்கள் பிறிதெல்லாம் அதுபோலும்
இயல்பாகும் நீதியினில் ஒழுக !
அறிவிலர்கள் உதையந்தான் காணாதார்
அல்லிடையிற் கண்டபொரு ளெல்லாம்
அறிவதுதான் சந்தேகம்! அதுபோலும்
விகாரமாம் அநீதி ஒழுகல்!

(10)

பொருட்குறிப்பு

[உதையம் - ஞாயிறு தோன்றுதல்
அல்லிடை - இருட்டின் நடுவே]

**விளக்கம்**

'நீதி நெறிப்படி ஒருவன் வாழ்வானாயின், அது எப்படிப் பட்டது?

கதிரவன் ஒளியில் அனைத்துப் பொருட்களையும் கண்ணால் பார்ப்பது போல்வது! நன்மை தீமையைப் பிரித்து அறிவான் அவன்!

அப்படி இல்லாமல், இருட்டில் தடவினால் அதனால் யாது பயன்?

இருட்டில் எதைத்தான் பார்க்க இயலும்?

அதுபோன்றதுதான், அநீதி வழியில் நடத்தலும்! பயனற்றது நன்மை எதையும் பார்க்க இயலாதது?"

# 55

## Don't grope in dark !

He whose guidance is Ethics
Knows right and wrong !
Just like a man sees better in daylight !
He whose path is vile]
Knows not good and evil
Just like a fellow groping in dark !

(10)

### Terms expounded

[utayam - sunrise
allitai - in the midst of darkness]

### Exposition

"When a man follows the path of morality, he can understand what is just and what is not. It is like perceiving in daylight!

If a fellow walks in the foot prints of immorality, he can't view things in proper perspectives. It is like groping through darkness!"

# 56

## கோமாளி மொழி

நீதியெனும் கண்டிப்பின் முடிவுதான்
திரிபின்றித் தெளிவாக மொழிதல் !
நீதியிலாப் பகடியது முடிவுதான்
பலபலவாந் திரிபாக மொழிதல் !
நீதியிலாச் சலமதுவின் முடிவுசம்
மதமின்றிப் பலவந் தமொழி !
நீதியிலா மடியினது முடிவுதான்
காரியம் கெடுகவே மொழிதல் !

(11)

பொருட்குறிப்பு

பகடி - கோமாளி
சலம் - பொய்
மடி - சோம்பல்]

**விளக்கம்**

நீதிமானாக இருந்து, நீதிவழியே நடப்பவன், பொய்க் கலப்பின்றி, உண்மையைத் தெளிவாகக் கூறுவான்!

ஆனால், நீதிவழியே செல்லாத கோமாளித் தனமானவன் மொழிவது, நேர்மை அற்றதாகவும், உண்மைக்கு மாறானதாகவும் இருக்கும்!

நீதியில்லாது பொய்யுரையானது. கேட்போரிடம் திணிக்கும் மொழியாகும்!

நீதி என்பது கொஞ்சமும் இல்லாத சோம்பல் மொழியால், எடுத்த செயல் பழுதாகும்!

# 56

## Jester language!

From the path of Justness
Comes the undistorted and serene expression!
From the tongue of untruthful jester,
Only comes distorted lies!
From the mouth of unjust sloth
Only issues untruth words!

(11)

### Terms Expounded

[pakaṭi - jester
calam - falsity
maṭi - indolence]

### Exposition

"A man of justice will talk only truth! His expression will be serene!

But, the untruthful buffoon's words will be distorted and causing evil results.

The receiver will not be happy with such unethical words.

Such unjust words will only help to cook the goose!"

# 57

## காசை விணடிப்பார்!

மெய்ப்பொருளைக் கொள்வார்கள் முன்பின்னுங்
கலந்தஅறி வினர்கள்தாம் என்போர்

கைப்பொருளைக் கருதியுண்மை கண்டழித்து
மற்றொன்றைக் கருதவே மாட்டார்
மெய்ப்பொருளைக் கொளமாட்டார் பொய்ப்பொருளைக்
கொள்வார்கள் மூர்க்கரவர் என்போர் !
கைப்பொருள்வந் ததுயென்றால் கைவந்த
படிசெய்வார் கருதுவதும் இலரே !
(12)

பொருட்குறிப்பு

*[கலந்த அறிவினர் - நன்கு கற்ற அறிவினர்]*

**விளக்கம்**

"நன்கு கற்ற அறிவாளிகள் உயர்ந்த மெய்ப்பொருளையே நாடுவார்கள்! பொய்யானவற்றைக் கொள்ளமாட்டார்கள்!

அவர்கள், பொருளுக்காகப் பொய்மையை நாடமாட்டார்கள்; உண்மையையும் கைவிட மாட்டார்கள்! உண்மையைத் தவிர, வேறு எதையும் கொள்ளமாட்டார்கள்!

ஆனால், மூர்க்கத்தனம் கொண்டவர்கள் என்ன செய்வார்கள்?

பொய்மையையே நாடுவார்கள்! மெய்யானவற்றைத் தேட மாட்டார்கள்!

அப்படிப்பட்ட மூர்க்கர்களின் கையில் காசு வந்தது என்றால் என்ன செய்வார்கள்?

கைக்கு வந்தபடி எல்லாம் செலவு செய்து விணடிப்பார்கள்!"

# 57

## Will become a squanderer!

The Enlightened never embrace falsity !
They will contemplete falsehood never !

The Pigeons will perceive justness never!
They will strire for illusion ever !
They wiil spend prodigally !

(12)

**Terms Expounded**

[kalanta - arivinar - the wise]

**Exposition**

"The erudite always book for truth in all whereas the pigeons will embrace falsity.

The wise people never advocate falsehood; They won't win at the cost of truth always!

On the contrary, the dolts will never search for veracity!

The goofs will spend prodigally whenever they get money on hand!"

## 58

### திருப்தி எதில்?

அறிவினர்க்கு நீதியிலே திருத்தியாம்
அறிவிலருக்கு எதிலேயும் இல்லை !
அறிவினர்நீ தியடைந்தாங் கதுபெரிதென்
றெனத்தேறி வேறொன்றை அணுகார் !
அறிவிலர்நீ தியேன்றியே எல்லாந்தான்
அடைந்ததிலும் நிலைபெறநில் லாமல்
அறிவினர் நீதியிலே நடக்குங்கால்
மனதாகிப் பின்னுமதை மறப்பார் !

(13)

## பொருட்குறிப்பு

*[திருத்தி - நிறைவு]*

**விளக்கம்**

*"அறிவாளிகளுக்குத் திருத்தி தருவது எது?*

*நீதிதான்!*

*"இந்தத் திருத்தி அடைந்தால் போதும், வேறொன்றும் வேண்டாம்" என்று அறிவினர் இருப்பர்!*

*ஆனால், அறிவிலிகள்?*

*எதிலேயும் திருத்தி கொள்ளார்!*

*அறிவற்றவர்கள், எல்லாவற்றையும் அடைந்தாலும், அவற்றிலும் மனநிறைவு கொள்ளமாட்டார்கள்!*

*அப்படிப்பட்ட அறிவீனர்கள், அறிவாளிகளைப் பார்ப்பார்கள்; ஆனால், அறிவாளிகளைப் போல நடக்கமாட்டார்கள்!"*

# 58

## In what is contentment?

The Erudite attain contentment in Ethics!
They won't further strive for anything !
But the dullards?
They attain satisfaction never !
They perceive the way good of wise
But they learn never !

(13)

### Terms expounded

[tirutti - self satisfaction]

### Exposition

"What renders contentment to the learned?

It is Justice!

The enlightened will not expect anything further!

But, the block-headed?

They never secure contentment!

They look upon the wise but they never follow their footprints!"

## 59

### வைதவரை வையார்!

வைதவரை வையலாம் நெறியெனினும்
ஞானத்தோர் வையார்கள்! பொய்யே
பொய்தவர்க்குப் பொய்யாகு நெறியெனினும்
உண்மையோர் பொய்யார்கள்! மோசம்
செய்தவரைச் செய்யலாம் நெறியெனினும்
தருமத்தோர் செய்யார்கள்! இந்தச்
செய்தவம்போல் இதுகளுட சிறப்பெலாந்
தனித்தனியே பிறித்தறிவார் தெளிவோர்!

(14)

### பொருட்குறிப்பு

[ஞானத்தோர் - அறிவாளிகள்
வையார் - வசைமொழிபகரார்]

விளக்கம்

"நம்மைத் திட்டியவரை, ஒருவழியில் பார்த்தால், நாமும் திட்டலாம்!

ஆனால், அறிவாளிகள் அவ்வாறு செய்ய மாட்டார்கள்!

நம்மிடம் பொய் பேசியவர்களிடம், நாமும் பொய் பேசலாம்!

ஆனால், ஞானம் உள்ளோர் அப்படிப் பதிலுக்குப் பொய்யைப் பேசமாட்டார்கள்!

நமக்கு ஒரு மோசம் செய்தவர்களிடத்து நாமும் பதிலுக்கு ஒரு மோசம் விளைக்கலாம்!

ஆனால், நேர்மை மிக்கோர் அவ்விதம் பதிலுக்கு மோசம் செய்யார்!

இவ்வாறு, அறிவாளிகள், நீதிப்படி, தாம் செய்யவேண்டியது இன்னது, செய்யக் கூடாதது இன்னது என்று நன்கு பிரித்துப் பிரித்துத் தெளிவாக இருப்பார்கள்!"

## 59

### Never retaliate the sneering !

It is proper to chide one who scoffs at !
But the wise never do !
It is proper to utter lies to one who is a gas bag !
But the educated never do !
It is proper to do treachery to one who is villany !
But the enlightened never do !
Likewise the prodigies know all bifurcated !

### Terms expounded

[jnānāttōr - wise
vaiyār - those who don't taunt]

### Exposition

"It is right, in a way, to scold a person who rebukes us !

But the wise persons will never indulge in such deed!

It is correct, in a way, to cheat a man who is a cheater!

But, the enlightened will never foot for it!

In this manner, the erudite know what is just and what is unjust!"

## 60

### எப்பயனும் அறிவார்!

உரியவிவ காரமுப காரமுண்மை ஞானமெனும்
இவற்றின் பயனறிந்தார் !
சரியையென்றுங் கிரியையென்றும் யோகமென்றும்
ஞானமென்றும்
சாற்றினது வேறோ?
உரியவிவ காரத்தை அறிந்தவர்கள் எப்பயனும்
அறிந்திடுவார் ! பிறர்க்கும்
அரியதொரு கைநெல்லிக் கனியெனவே காண்பிப்பார்
அஃதவர் சுவாபம் !

பொருட்குறிப்பு

[சரியை - ஒழுக்கம்
கிரியை - செய்கை
யோகம் - தியானம்]

**விளக்கம்**

'உரிய விவகாரம்' என்று ஆசிரியர் நாகைச் சத்தியஞானி கூறுவது ஒழுக்கத்தையே!

ஒழுக்கத்தை அறிந்தவர்கள் எந்தப் பயனையும் அறிந்து அதனைப் பிறருக்குத் தெரிவிப்பர் என்று கூறுகிறார் ஆசிரியர்!

இவ்வாசிரியர், கிரியை என்பதை 'உதவி' என்றும், யோகத்தை 'உண்மை' எனவும் கொள்கிறார்!

# 60

## Will know all values!

Those who grasped-
Discipline, Grace, Truth and Wisdom
Uttered these as-
Cariyai, Kiriyai, Yoga and Gnāṉam!
Is't false? Not at all!
Those who understandeth Discipline
Will shower its benefits on the body polity!
(15)

**Terms expounded**

cariyai - discipline
Kiriyai - performance]
yōgam - meditation]

### Exposition

Our author Satyajnāni of Nagappattiṇam denotes only discipline in the words, 'uriya vivahāram'

One who realises the value of righteousness, will render its ütility to all and sunry.

Author considers 'kiriyai' as 'help' and yoga as 'truth

## 61

### பெற்றார் கோடி! இழந்தார் கோடி!

இம்மைமறு மையுமெல்லா உறுதிதரு வதுநீதி
என்பார்கள் மேலோர்!
செம்மையெல் லாவுலகத் துங்கண்டிப் புமுதனான்கும்
ஒவ்வொன்றே அடைந்தாங்(கு)
இம்மைமறு மையுமுறு திபெற்றாருங் கோடான
கோடியிது வன்றி
இம்மைமறு மையுமிழந் தார்கோடா னகோடி
இதுகதையும் அன்றே!

(16)

பொருட்குறிப்பு

[இம்மை - இந்த உலகில்
மறுமை - இறந்தபின் கிட்டும் உலகில்]

விளக்கம்

இந்த உலகிற்கும், மறு உலகிற்கும் நமக்கு நன்மை தருவது நீதி என்று மேலோர் உரைப்பதாக ஆசிரியர் வரைகிறார்.

இத்தகு நீதியைக் கைக் கொண்டு, இம்மை மறுமைப் பயன்களை அடைந்தோர், கோடானு கோடி!

அதே சமயம், நீதி இல்லாமற் போனதால், கெட்டுப் போனவர்களும் கோடிக்கணக்கில் என்கிறார் ஆசிரியர்!

# 61

## Crores obtained! *Crores lost!*

By following the path of Justice
Crores have attained benefits
Both here *and hereafter !*
By execrating *the voice of Justness*
Crores have *lost* benefits
*Both here and hereafter !*

*(16)*

### Terms expounded

[immai - in this world
marumai - after this world]

### Exposition

Acc*ording to the sages,* our author opines, only Justice *will fetch bliss both in this world* and hereafter!

By adopting the ways of *morality*, crores have accorded bliss here and hereafter!

Similarly, by going in the path of injustice, crores have foregone pleasance here and hereafter!

# 62

## அநீதியினது தொகையும் பாதமும் உரைக்கின்றது - கவி 5

### அநீதிக் கால்

அநீதியவ் விவகாரத்து தினோடுப காரம்
 சத்தியமே மூடஞ்
சொன்னவிவை நான்குமே தொகையாகுஞ் சதுர்விதத்துக்
 கெதிரான விகடம்
முன்னாத தற்பேத முலோபகுணம் விதண்டம்
 இவைநாலு மிதிலடங்கும் !
பன்னாளும் பகடிசலம் மடிமூன்றும் அநீதிக்
 காலாகு மன்றே !

(1)

பொருட்குறிப்பு

[சதுர்விதம் - நான்கு விதங்கள்
உலோபகுணம் - கஞ்சத்தனம்
விகடம் - தடை
விதண்டம் - வாக்குவாதம்
பகடி - நிலையற்ற தன்மை
சலம் - பொய்
மடி - சோம்பல்
கால் - பிரிவு]

விளக்கம்

"ஒழுக்கம், பிறர்க்கு உதவுதல், சத்தியம் இவற்றை 'மூடத்தனம்' என நினைத்தல் மற்றும் அநீதி ஆகியவற்றில், விகடம், தற்பேதம், உலோபத்தன்மை, விதண்டம் ஆகிய நான்கும் அடங்கும்!

நிலையற்ற கோமாளித் தனம், பொய்மை, சோம்பல் என்ற இம்மூன்றும் அநீதியின் பிரிவுகள்!"

# 62

## Schisms of morality !

Considering
Discipline, Munificence, Veracity as Stupidity
And Injustice — these
Do cover the schisms —
Obstruction, Partiality, Stinginess and Disputation
Offshoots of Injustice are also —
Buffoonery, Falsity and Sluggishness !

(1)

**Terms expounded**

[catur vitam - four kinds
ulōpakuṇam - miserliness
vikaṭam - obstruction
vitanṭam - disputation]

# 63

## அநீதிக்குள் நீதியை அடக்குவர் !

அவ்விவகா ரமுதலாய் நாலுந்தான் ஒன்றிலொன்று
சிலமாறி வரினும்
அவ்விவகா ரஞ்சலத்தில் அடங்குமுப காரம்தான்
சத்தியங்கள் இரண்டும்தான்
செவ்வையிலாப் பகடியினும் சிலசலத்தி னுமடங்கும்
மூடமடி யினுமாய்க்
கவ்வைகாரி யப்பெயராய் வழங்குமுல கினில்நீதி
வழங்காத விடத்தே !

(2)

பொருட் குறிப்பு

[கவ்வை - காரியம்
கவ்வை காரியம் - ஒரு பொருட் பன்மொழி]

**விளக்கம்**

"அநீதியானது வழங்குகின்ற ஓர் இடத்தில், சலம் என்னும் பொய்யிலும், பகடி என்ற நிலையிலாத கோமாளித்தனத்திலும், சோம்பலிலும் நல்ல தன்மைகளான ஒழுக்கம், சத்தியம், பிறருக்கு உதவுதல் ஆகியவற்றைச் சேர்த்துக்கொண்டு, எல்லாம் அநீதியாய் விடும்!"

# 63

## They will include justice into injustice !

In places where immorality dominates,
Inclue they will all these —
Discipline, Munificence, Veracity
Into sluggishness, Falsity and Buffoonery !

(2)

**Terms expounded**

[kavvai - an affair
kavvai kāriyam - *tantology*]

**Exposition**

"In places where by unrighteousness prevails, everything will be in topsy-turvy! Righteousness, helping tendency, truth will be included into laziness, unsteadiness and untruth!"

# 64

## சீச்சி அநீதி !

அநீதி யுறுவோர்கண் ணுறுதிட்டாந் திரப்பொருளும்
அறியார்கள் என்னில்
அநீதி யுறும்சடரனு மானப் பொருளும்
அறிவ தெங்கே?
அநீதி படுகுழிபோ லாஞ்சீச்சி நினையார்கள்
அறிவினரும் திரும்பி
அநீதி அறிவிலர்க்கு நன்னீதி அறிவினர்க்கும்
சுபாவமாய் அணுகும் !

(3)

### பொருட்குறிப்பு

[திட்டாந்திரப் பொருள் - வெளிப்படைப் பொருள்
சடர் - அறிவீனர்
சடர் + அனுமானம் = சடரனுமானம்]

### விளக்கம்

"அநீதிக்காரர்கள், வெளிப்படையாகத் தெரிவனவற்றையே அறிந்துகொள்ளமாட்டார்கள் !

அப்படி இருக்கும்போது, ஊகித்து அறிவதை எங்கே செய்யப் போகிறார்கள்?

அநீதியானது, படுகுழி போல ஆகும்!

'சீச்சீ' என்று இகழ்வார்கள் அதை, அறிவாளிகள் !

அறிவற்றவர்களுக்கு, அநீதியே நல்ல நீதியாகத் தென்படும்!

அறிவு உள்ளவர்களுக்கோ, நீதி என்பது, இயல்பாகவே வரும்!"

# 64

## Fie upon immorality !

Where will the believers of injustice
Grasp the value of Justice ?
While they understand not the blatant
Where will they realise the subtle ?
Injustice is a pit - fall !
Wish will despise it saying - 'pshaw !'
Immoral is moral to the vulgar
Justice is natural to the wise !

(3)

### Terms expounded

[tiṭṭāntarporuḷ - things seen blatantly
caṭar - the vulgar
caṭar + aṉumāṉam = caṭaraṉumāṉam]

### Exposition

"The vile will not come to realise even the blatant message !

How can they study the nuances ?

Immoral path is nothing but a pit-fall !

The sages will say only 'pish !' againt injustice !

Immorality is morality to the vulgar !

But, for the prodigies, the right path is quite natural !"

# 65

## பகடி !

பொருளெலாம் பகலிலே வடிவுநிறம் இன்னதெனத்
தெளிந்திடுதல் இதுவும்
இருளறவே எல்லாந்தான் இதைப்போலும் தெளிதலிது
கண்டிப்பின் சுபாவம் !
இருணிலவிற் பழுதையினைப் பாம்பென்றுங் கிளிஞ்சிலையே
வெள்ளியென வுந்தான்
பருளிதன் ஒன்றையொன்றாய் நிச்சயித்தல் இதுவும்
இதுபோலுமாம் பகடி !

(4)

### பொருட்குறிப்பு

[இருள் + நிலவில் = இருணிலவில்
பருள் + இதன் = பருளிதன்
பருள் - பருப்பொருள்]

### விளக்கம்

"பட்டப்பகலில், ஒளியின் கூடுதலால், எந்தப் பொருளும் நன்றாகக் கண்ணுக்குத் தென்படும்! பொருளின் வடிவு, நிறம் எல்லாம் தெரியும்!

ஆனால், இருட்டில் பழுதை என்று சொல்லக்கூடிய கயிறு, பாம்பாகத் தென்படும்! கிளிஞ்சில், வெள்ளிபோலத் தோற்ற மளிக்கும்!

இதுதான் நிலையற்ற கோமாளித்தனம் என்று சொல்லக்கூடிய பகடி ஆகும்!

உள்ளது உள்ளபடி தென்படுதல், ஒழுக்கத்தின் வழி!

உள்ளது பிழையாகத் தென்படுதல், பகடி வழி!"

## 65

### Buffoonery !

Under the broad day light
Things are visible with clearance utmost !
Under the darkness ?
Rope will appear as snake !
Shell will look like silver !
The former is the tendency of Discipline !
The latter is the nature of Unsteadiness !

(4)

***Terms expounded***

[iruḻ + nilavil = iruṇilavil
paruḷ + itaṉ = paruḷitan
paruḷ - solid substance]

**Exposition**

"Shape and hue of any article will be visible quite clearly during day time.

But during night, a rope will like a snake! A shell will look *like a silver substance!*

The former is the nature of righteousness!

The latter is the disposition of a wag!"

## 66

### அனந்தம் !

*பொருள்கவர்வான் அல்லதொரு பகைமுடிப்பா னதற்கேற்ற*
*துற்காலம் பார்த்தே*

இருளிலே முடித்திடுதல் ஏதெனினும் நிமித்தத்தால்
　　தனைமுடித்துக் கோடல்
கருதுமிதும் இதனைப்போ லுமாம்சலம் மடியின்
　　சுபாவம் அதுதானே !
இருளில்வழி தெரியாதான் இல்லையெனல் இதுமிதனைப்
　　போலும் அனந்தம் !

(5)

பொருட் குறிப்பு

[துற்காலம் - கெட்டகாலம்; இங்கே கெட்ட செயலுக்கான காலம்]

விளக்கம்

“திருடுபவன், எதிரியை அழிப்பவன், இப்படிப்பட்டவர்கள் இந்தச் செயல்களைச் செய்ய வாய்ப்பான காலம் பார்ப்பர்!

சரியான நேரம் பார்த்து இருளிலே இப்படிப்பட்ட செயல்களை நிறைவேற்றுபவர்கள் உளர்! சோம்பலின் இயல்பு இது! பொய்மையின் குணம் இது!

இருளில் செல்லும் இவர்களுக்கு ஒளிவழி தெரியவில்லை!

இதனைப் போல எத்தனையோ கூறலாம்! இவர்களைப் போல் பலர் உளர்!”

# 66

## Innumarable !

To steal an object
To kill an opponent
They will seck time !
This is an indication of Listlessness and
Untruth !

Groping in the dark as this
We can cite innumarable !

(5)

**Terms expounded**

[turkālam - evil time; here propitious time]

**Exposition**

"Those who like to strike an oppoment and those who plan to steal, would calculate their time!

In utter darkness, they will accomplish their job! such persons are countless!

It is a token of apathy and unjustness!"

## 67

*நீதிநாள் ஏது?*

*நீதிதனை அறிந்தவர்க்குக் காலங்கள் எப்போதும்*
*ஒன்றாயே நிற்கும் !*
*நீதிதனை அறியாத பதர்கட்குத் தங்கள்குண*
*விகாரத்தினாலே*
*நீதிதான் முற்காலத் துண்டதுவும் நற்காலமாம்*
*என்பர் இப்பேர் !*
*நீதிதான் ஏதென்பர் தீதாகும் காலமென்பர்*
*அவர்குணத்தின் திரிபே !*

*(6)*

பொருட் குறிப்பு

*[இப்பேர் - இவர்கள்]*

### விளக்கம்

"நீதிமான்களுக்கு எல்லாக் காலமும் நல்ல காலமே!

அவர்கள் தருணம் பார்க்கவேண்டியதில்லை!

ஆனால் நிலையில்லாப் பகடிகளுக்கு, நீதி என்பது கடந்த காலத்தில், முன்பு எப்போதோ இருந்த பழங்கதை!

"நீதி என்றால் என்ன? அது எங்கே உள்ளது?" என்று அப்பகடிகள் கேட்பர்!"

## 67

## Where is morality ?

For the men righteous
All time is time best !
But for the wags
It is a thing of past !
This all happens due to their mind twist !
(6)

### Terms Expounded

[ipper - these people]

### Exposition

"For the righteous personalities, all time is excellent!

They need not wait to strike!

But, for the unstable air-headed, justice is a remote phenomenon; it is a thing of past!

It all happens inasmuch their mind is a distorted one!"

அரசர் திறம்
செங்கோல் திறம்
அறிஞர் திறம்
உரைக்கின்றது

கவி - 14

## 68

### கல்லார் விலங்கே !

நீதிதான் உலகத்தின் நிருபன்முதல் எல்லார்க்கும்
பெரிததுவே ஆகும் !
நீதிதான் அரசன்முதல் வலியார்க்கும் ஒன்று
எனலும் ஆகும் !
நீதிதனைக் கற்றவரே மக்களாம் நீதியினைக்
கல்லாரே விலங்காம் !
நீதியும் அநீதியும்தான் உலகுக்கு நன்றெனவும்
தீதெனவும் நிறுப்பார் !

(1)

பொருட்குறிப்பு

[நிருபன் - அரசன்]

விளக்கம்

"அரசன் முதல் ஆண்டி வரை அனைவர்க்கும் நீதி என்பதே பெரிதானது! மதிப்புமிக்கது!

அரசன் முதல் அனைவருக்கும் பொதுவாக விளங்குவதும் நீதியே!

நீதி என்பதைக் கற்றவர்களே, மக்கள் என்று குறிக்கத் தக்கவர்கள்!

நீதி என்பதைக் கல்லாதோர், விலங்கு என்று குறிக்கத் தக்கவர்கள்!

நல்லது, தீயது என்று உலகில் பிரிக்க இயல்வது, நீதி, அநீதி என்பவற்றை ஆதாரமாகக் கொண்டேயாம்!"

## 68

### Unjust are beasts !

Great is only Justice
For kings and riffraff alike !
Common is only Righteousness
For kings and riff-raff alike !
People are they who know Probity !
Beasts are they who know not Justness !
Good and bad are weighed
Only on the scale of Justice !

(1)

#### Terms expounded

[nirubaṉ - king]

#### Exposition

"For the potentates and Dick and Harry, only Justice is valualle as well as common!

Only those people who realise Righteousness can be called as people; others, beasts!

What is the base to call anything good or bad? what is the yardstick?

Justice!"

# 69

## அரசன் கடமை!

அரசன் தான் உலகத்தில் பெரியோனாம்!
அவனினும் செங்கோல்பெரிதாம்! அதனிற்
பெரிதாவர் அறிவரவர் தம்மிற்பெரி தொன்றில்லை!
அவர்கட வுளையும் ஒப்பர்!
அரசனுமே தன்னைத் தான்உயர்த் தாமல்
அனைவரினும் தானொருவன் ஆகிப்
பெரியாரை உயர்த்தத்தா னுயர்ந்து நடுநின்
றிடுதல்பே ரரசன் கடமை!

(2)

### பொருட் குறிப்பு

[அறிவர் + அவர் = அறிவரவர்
நடு - நடுநிலைமை]

### விளக்கம்

"இந்த உலகில் பெரியோன் யார்?
அரசன்!
அவனைவிடப் பெரியது எது?
செங்கோல்!
அதனைவிடப் பெரியது எது?
அறிவாளிகள்?
அவர்களைவிடப் பெரியது எது?
எதுவுமில்லை!

ஆகவே, பெரியோர்கள் கடவுளை நிகர்த்தவர்கள்!

ஆதலால், அரசன் என்பவன், தனது நலத்தையே பார்த்திராது, குடிமக்களில் ஒருவனாகத் தன்னை நினைத்துக் கொண்டு, அறிவாளிகளாகிய பெரியோர்களை உயர்த்த வேண்டும்!

அப்போது, அந்த அரசனும் உயர்வான்!

உயர்ந்து, நடுநிலைமையோடு அரசாளுதல், அரசனின் கடமை!"

# 69

## Obligation of a King !

Supreme is the King !
Sceptre of his more greater !
Supreme all the more is the Sage !
Nothing is still greater than a Prodigy !
He is God more or less !
Kings should elevate such Sages !
Without ploughing his own *furrow* !
Kings should become *one among all* !
Rendering justice even-handed !

(2)

### Terms Expounded

[arivar + avar = arivaravar
naṭu - equity]

### Exposition

"Who is great *in* this world?
King!
Still *greater?*
Sceptre!
Greater than that?
Enlightened!
Greater than them?
Nothing!
So, the wise one is on par with God!

Hence, the kings, behaving themselves as subjects, should up lift the sages besides keeping equity!"

# 70

## நீதியும் அதிகாரமும்!

செங்கோல்தான் அரசன்தன் முத்திரையாச்
சீர்தூக்கும் கோல்போற் சாய்வின்றி
அங்சுனுல கினில்நீதி அதிகாரம்
இரண்டுமிரு பாகமே ஆகி
எங்குந்தான் கண்டனையும் தண்டனையும்
செய்தடக்கி எழுநீதி தன்னைச்
சங்கையொன்று மில்லாமல் எல்லார்க்கும்
சம்மதத்திற் காரியமே படுத்தும்;

(3)

### பொருட் குறிப்பு

[சங்கை - ஐயம்
சம்மதத்தில் - ஏற்புடைத்தாய்; உருபுமயக்கம்
படுத்தும் - செய்யும்]

### விளக்கம்

"செங்கோலே அரசனது முத்திரை!
இச்செங்கோலானது, சமன்செய்து சீர்தூக்கும் துலாக்கோல் போல நடுநிலையோடு இருக்கவேண்டும்!
துலாக்கோலின் இரு பக்கங்கள் யாவை?
ஒரு பக்கத்தில் நீதி
மறுபக்கத்தில் அதிகாரம்!
இரண்டும் சமமாக நிற்கவேண்டும்!

அரசன், இந்நெறியில் கடிந்தும் தண்டித்தும், தீமையை அடக்க வேண்டும்!

மக்கள் மனங்களில் ஐயுறவு ஏற்படா வண்ணம், எல்லோர்க்கும் பொதுவானவன் என்ற கருத்தைத் தோற்றுவித்து, ஆட்சி செய்ய வேண்டும்!"

# 70

## Equity and dominion !

*The Sceptre being a king's signet*
*Should remain without tilting !*
*Two ends of the scale*
Are nothing but Justice and *Authority !*
Kings *should* forster Justness
By executing condemnation and **punishment !**
Removing all doubts from the minds of
body polity
His sceptre should glow !

(3)

### Terms expounded

[cankai - scepticism
cammatittil - with the acceptence of; change of case.
paṭuttum - will execute]

### Exposition

"King's signet is his sceptre!
This sceptre should remain uprightly just as a scale!
What are two ends of this scale?
Equity and Authority?

A king should maintain jnstice by means of authority as well as *execration!*

Forming a notion in the *minds* of people that he is not impartial, he must exercise his *dominion!"*

# 71

## நியாயத்தை முன்னிறுத்து !

நியாயந்தான் வலப்பாகம் அதிகாரம் இடப்பாகம்
ஆகுமது வன்றி
நியாயந்தான் அதிகரித்தால் தனக்கும்தன் சூழ்ந்தார்க்கும்
நன்றதிகா ரந்தான்
நியாயத்தின் அதிகாரத்தால் தனக்கும்தன் சூழ்ந்தார்க்கும்
கேடாகும் அதனால்
நியாயத்தை முன்னடத்தி அதிகாரம் பின்னடத்தல்
நல்லவர்தம் கடமை !

(4)

### பொருட்குறிப்பு

[சூழ்ந்தார் - உறவினர் மற்றும் நண்பர்கள்
நியாயத்தின் அதிகாரத்தால் - நியாயத்தைவிட
அதிகாரம் அதிகரித்தால்]

### விளக்கம்

"ஒரு மனிதனின் வலப்பக்கத்தில் நிற்கவேண்டியது **நியாயம்!**

அவனுடைய இடப்பக்கத்தில், **அதிகாரம்!**

இரண்டில், வலுவுள்ளதாக இருக்கவேண்டியது, நியாயமே!

இப்படிப்பட்ட நியாயம் என்பது ஒருவனின் செயற்பாடுகளில் கூடுதலாக இருந்தால், அவனுக்கும், அவனது உறவினர் மற்றும் நண்பர்களுக்கும் நல்லது!

இதற்கு மாறாக, நியாயத்தை ஒதுக்கிவிட்டு, அதிகாரத்தை மட்டும் செயற்படுத்தினால், அது அவனுக்கும், அவனது உறவினர் மற்றும் நண்பர்களுக்குக் கேடாகவே முடியும்!

ஆதலால், **நல்லவர்களின் கடமை** எது?

நியாயத்தை முன்னிறுத்துவது!

அதிகாரத்தைப் பின்னிறுத்துவது!"

# 71

## Erect justice in front !

Establish Justness at right !
Erect Authority at left !
Domination of Justice fetches limelight
To him as well as his kindred !
Authority without Justice brings calamity
To him as well as his consanguines !
Duty it is of the good
To form Justice in front
And Authority at back !

(4)

### Terms expounded

[cuḻntār - cognates and friends
niyāyattiṉ atikārattāl - if power exceeds virtue]

### Exposition

"Equity should be kept at the right side of a person!

Power should be placed at his left!

Because, Ethics should be in a stronger position between the two!

If only equity is more, it will usher in summer to him as well as his cognates.

If authority is predoninant, it will invite only disaster to him as well as his consanguines!

So, it is obligation on the part of any wise to set up Ethics in front and power in the rear wing!"

(4)

# 72

## பலரும் வேண்டும் !

இருபாதத் தாலுலகம் எங்கும்தான் நடக்கவே
இயற்றலாம் முறைமை !
ஒருபாதம் இன்றியிலே ஒருபாதத் தானடவா(து)
உலகெங்கும் அதனால்
பெரியவரே என்னினும்தா னொருவரால்அ மையாதாம்
பலருமே வேண்டும் !
பரமனுக்கு முண்டுதொழில் படைத்தறுதி சங்கரராம்
அரசுக்கும் அதுவே !

(5)

### பொருட்குறிப்பு

[பரமன் - பிரம்மா
படைத்தறுதி - படைத்து + அறுதி
படைத்து - படைத்தல் தொழில்
அறுதி - அழித்தல் தொழில்
சங்கரர் - சிவன்]

### விளக்கம்

"இரு கால்களால் நடந்து சென்றால், உலகெங்கும் போய் வரலாம் !

அப்படி இலாது, ஒரு காலால் நடக்கமுடியுமா?

அதுபோல, எவ்வளவு பெரியவராக இருந்தாலும், அவர் ஒருவரால் எந்தச் செயலும் ஆகாது!

பலர்சேர்ந்து செய்தால்தான், எச் செயலும் நிறைவேறும் !

கடவுளரே, படைத்தல் தொழிலைப் பிரம்மா என்றும், அழித்தல் தொழிலைச் சிவன் என்றும் பிரித்துத்தானே செய்கின்றனர்?

அப்படி இருக்கும்போது, அரசனுக்கும் அதுதானே பொருந்தும்?"

படைத்தல் தொழில், அழித்தல் தொழில் முதலியவற்றின் உண்மை விளக்கம் வேறு; நாம் கூறிவரும் கருத்து வேறு! உண்மை விளக்கம், 'தமிழர் பண்பாடுகளை மூடிய மூடநம்பிக்கைகள்' என்ற தலைப்பில், நித்திலக் குவியல் என்ற பருவ இதழில் (செப்டம்பர் 2000, ப. 9-12; அக்டோபர் 2000 ப. 8-9: மாணவர் மன்றம் வெளியீடு, 41, இப்ராகிம் தெரு, சென்னை -600 001) வெளியாகியுள்ளது.

# 72

## It is a team work !

Necessary are two feet
To walk and rule !
what can be done with a single foot?
However great a man be
Needs to accomplish any subordinates !
Even gods bifarcate duties -
Brahma to create and Siva to annihilate !
Is it not valid in cases of kings?
(5)

### Terms Expounded

Paraman - Brahma
paṭaittaruti = paṭaittu + aruti
paṭaittu - the job of creation
aruti - the profession of annihilation
Cankarar - Siva]

### Exposition

"To walk a-foot, one needs two feet!
Is it possible with just one?

To execute any act, for a person, however par excellance he be, adjacent helps and prop are a must!

Even gods disjoint duties among themselves as Brahma to create and Siva to demolish!

So, it goes without saying, that a joint venture is necessary for kings to consummate any act."

Original meaning of Creation and Annihilation is different! What we are hitherto uttering is utterly false! The truth has been divulged in an article, by me, entitled as 'Superstitions that covered the Tamil Culture' published in *Nittilak kuviyal* (from Mānavar Manram, 41, Ibrahim Street, Chennai-1), September 2000 and october 2000, pp. 9-12; 8-9.

# 73

## தரத்துக்கேற்ப !

*அறிவென்னுங் கண்டறிந்த பெரியோர்கள் அனைவருந்தாம்*
*உறுமொருமை யாலே !*
*அறிவென்னுங் கண்டறியாச் சிறியோரை அவரவர்கள்*
*தரத்துக் கேற்ற*
*நெறியான கருமங்கள் தனிலிருத்திச் செய்குற்றம்*
*இரண்டினையும் ஆய்ந்தே*
*முறையாக நடத்துவது சாதுரியம் மாதுரியம்*
*ஓர்ந்தவர்க்கே முறைமை !*

(6)

பொருட்குறிப்பு

[உறும் - அடைவார்கள்
ஒருமையாலே - ஒற்றுமையாலே
மாதுரியம் - இனிமை
ஓர்ந்தவர்க்கே - ஆய்ந்து தெளிந்தவர்க்கே]

### விளக்கம்

"அறிவு என்னும் உண்மையை நன்கு தெரிந்த பெரியோர் களானவர்கள் அனைவரும், உயர் பண்புடன் இருப்பார்கள்! எவரும் தாழ்ந்து, அறவழி வழுவிச் செல்லார்!

ஆனால், அறிவு அற்றவர்களை அப்படிக் கருதக்கூடாது!

அறிவற்றவர்களில், நல்லவர் தீயவர் என்று எப்படிக் கண்டு நடத்துவது?

அவர்கள் செய்த நற்செயல்களை ஒருபுறமும், அவர்களின் குற்றங்களை ஒருபுறமும் நிறுத்தி, எடை போட்டுத் தீர்மானிக்க வேண்டும்!

இதுவே, செய்திறன், இனிமையாகப் பேசும் பண்பு உள்ள வர்கள் செய்யவேண்டிய முறையான செயலாகும்!"

## 73

### According to his standard !

The Enlightened can be treated
Great and alike !
But, how about the base?
Weighed should be their Good and Bad
Reached should be their status !
This is the way of any
With address and oily speech !

(6)

#### Terms Expounded

[urum - they will obtain
orumaiyālē - in an united way
māturiyam - sweetness
ōrntavarkkē - for those who have mastered]

**Exposition**

"The sages, since they understand Virtue, they will behave, without exception in an uniformed, virtuous way.

But, the vile will not behave uniformly as well as morally!

How to find out their status then?

Only by weighing their past good acts and beastly performances.

This must be the way of person with dexterity and wheedling quality."

# 74

## அறிஞரே அறிவார்!

*அறிவினர் நீதியறி விப்பதன்றி*
*அதிகாரம் காட்டலுமே வேண்டாம்!*
*அறிவினர் நீதியறி யாதெனினும்*
*நியாயத்தைத் தெரியவே சொல்லி*
*அறிவிக்கும் காலவர்கள்! அணைபுரண்டால்*
*அதிகாரம் காட்டத்தான் வேண்டும்!*
*அறிஞர் துணிந் துரைக்குந்தரம் இன்நீதி*
*இரண்டும் அறிஞரே அறிவார்!*

(7)

பொருட்குறிப்பு

*[அறிவிக்கும் காலவர்கள் = அறிவிக்கும்கால் + அவர்கள்]*

### விளக்கம்

"அறிவாளிகள், நீதியைத் தேவைப்படும்போது கூறிக்கொண்டிருந்தால் போதுமானது!

அறிவாளிகள், அதிகாரம் செலுத்துதல் தேவையில்லை!

நீதி அறியாதவர்களுக்கு நீதியைச் சாற்றி, அவர்களைத் திருத்தும் கடமை அறிவாளிகளுக்கு உண்டு! அறிவாளிகளே, நீதியின் காவலர்கள்!

அப்படி இருந்தாலும், அறிவாளிகள் சொல்லும் நீதியைக், கேட்கவேண்டியவர்கள் கேட்காமல் போனால், அந்த இடத்தில், அறிவாளிகள் அதிகாரத்தைக் காட்டத்தான் வேண்டும்!

இப்படிப்பட்ட நீதி வழங்குதல், அதிகாரம் காட்டுதல் என்ற இரண்டையுமே அறிவாளிகள் அறிவார்கள்!"

## 74

### Only the enlightened know !

The wise need not wield the sword of Power
They have only to advise !
They are the protectors of Justice !
On exigency, the wise have to wield the sword !
Only the erudite know
How to render Justness !
And
How to wield Power !

(7)

### Terms expounded

[arivikkum kālavarkaḷ = arivikkumkāl + avarkaḷ

## Exposition

"What is expected, generally, of the prodigies is advice! Moral!

They are the saviours of morality and order!

But, when their rod of advice proves ineffective, they have to resort to authority!

For the exercise of authority and advice, only the learned are the masters!"

# 75

## நீதி வேண்டும்!

பலமுள்ளோர் அதிகாரத்தால் வெல்லநினைக் குங்கால்
பலமது நன்றாகா
பலமில்லார் வஞ்சனையால் வெல்லவுமே நினைப்பார்கள்
பாரும் அதனாலே
பலமுள்ளோர் அதிகார மிருந்தாலும் பருநீதிதனில்
வெல்லும் காலம்
பலமில்லார் நீதியெனும் வெற்றிக்கே உடன்படுவர்
காரியமும் நன்றே!

(8)

### பொருட்குறிப்பு

[நன்றாகா - நன்றாகாது]

### விளக்கம்

"பலம் உள்ளவர்கள், தங்களிடம் அதிகாரம் உள்ளது என்பதற்காக, அதன்மூலம் ஒரு செயலை நிறைவேற்ற நினைப்பது நல்லது அல்ல!

பலம் உள்ள அவர்கள், தங்களிடம் பலம் இருந்தபோதிலும், நீதிவழியே செல்லுதலே நேரிது!

அதைப் போன்றே, பலம் இல்லாதவர்கள், சூது செய்து ஒரு செயலைச் செய்ய முனைவர்!

இதுவும் தவறானதே!

பலமில்லாதிருப்பினும், பலம் அற்றவர்கள், நீதிவழியைத் தேர்ந்தெடுத்து, அந்நீதி முறைமையில்தான் எதையும் நிறைவேற்ற எண்ணவேண்டும்! அப்போதுதான் அச்செயலும் இனிதாக நிறைவேறும்!"

## 75

### Needed is Justice !

The mighty should not resort to authority !
They have to resort to only Probity !
The dotards should not resort to slyness !
They have to embrace the path of
Uprightness !

(8)

### Terms expounded

[nan̲rākā = nan̲rākātu]

### Exposition

"Though possessed with might, the powerful should not select the way of power to execute any act!

They have to choose the right path, viz, justness!

In the simiiar mannar, the weak should not opt for underhand ways to achieve their ends!

They have to embrace the correct way, viz, again, justice!"

# 76

## பொதுவான நியாயம்!

*அரசனதி காரத்தை எல்லார்க்கும் பொதுவான*
*நியாயங்க ளுடனே*
*வீரசுகமே நடத்தினால் எல்லாருங் கைக்கொள்வர்*
*மிகவும்! அதுவன்றி*
*வரிசைபெறத் தங்களுக்கே வந்தவரென நினைப்பார்!*
*அவ்வரசுக் காக*
*பரிவுபெறு மெல்லாரும் பாடுபடத் துணிவர்அப்*
*போவரசு நன்றாமே!*

(11)

### பொருட்குறிப்பு

*[வீரசுகமே – வீரத்தோடும் சுகத்தோடும்;* **உம்மைத் தொகை]**

### விளக்கம்

"அரசனானவன், பாகுபாடு இலாது, அனைவர்க்கும் பொதுவான நீதியைக் கடைப்பிடித்து ஆளவேண்டும்!

வீரமாகவும், மக்களுக்கு நன்மை ஏற்படும்படியாயும் அவன் ஆளவேண்டும்!

அப்படி ஆட்சி நடத்தினால், அவனது ஆட்சியை அனைவரும் ஏற்றுக்கொள்வர்!

"நமக்கு ஏற்பட்ட சரியான அரசு" என்று மக்கள் மகிழ்வர்!

"இந்த அரசுக்காக நாம் பாடுபடவேண்டும்" என்று அனைவரும் முடிவு செய்வர்!

அப்போதுதான் அந்த அரசனது ஆட்சியும் நன்றாக அமையும்!"

# 76

## Justice is for all !

Rex impartial should be !
People will laud him only then !
Showing valour as well as tenderness
Is his duty prime !
People will begin to ponder then :
"He is the king born for us !"
The king's dominion also prosper will !

(9)

### Terms expounded

[*Viracukame* = with valour as well as grace]

### Exposition

"A king should be quite impartial towards his subjects!

He should tenderly as well as valourously rule the country.

Then, all will receive him with open arm.

All will begin to think that "he is born for us!"

Only then the particular potentate's ruling will go quite swimmingly!"

## 77

### தருமம் வருமே !

அருநீதி எனுங்கதிரோன் ஒளியதனால்
அழுக்கடையும் அநீதி யான
பெரியபக டிகள்சலங்கள் மடியென்னும்
பேரிருளை நீக்கியதற் குரிய
நிரைமூடர் தமையடக்கி நீதியறி வினர்கள்தலை
மேலெ டுக்கும் வண்ண
மரசுதனைச் செய்வாருக் கெவ்விதத்திலும்
அனந்தத் தருமந்தான் வருமே !

(10)

### பொருட்குறிப்பு

[பகடி - நிலையற்ற தன்மை; கோமாளி
சலம் - பொய்
மடி - சோம்பல்]

### விளக்கம்

"நீதி எனும் ஞாயிற்றின் ஒளி வந்ததும், நிலையிலாத் தன்மை சோம்பல், பொய் எனும் பெரியதோர் இருள் நீங்கிப் போகும்!

அப்படிப்பட்ட நீதியை அரசன் கையாள வேண்டும்!

முழுமூடர்கள் தலைதூக்காதவாறு, அரசன் அவர்களை அடக்க வேண்டும்!

அடக்கி, அறிவிலே சிறந்த அறிஞர்கள் செல்வாக்குப் பெறுமாறு அரசன் செய்ய வேண்டும்!

அப்படிப்பட்ட அரசாட்சியை ஓர் அரசன் செய்தானாகில், அவனே தருமவான்! அவனது ஆட்சியே தரும ஆட்சி!"

# 77

## Will attain *greatness* !

The sunlight of Justness
Will eradicate the darkness of
Instability, Untruth and Laziness !
Rex's obligation it is
To curb the pride of pigeons !
Rex's obligation it is
To make the wise to keep their head high !
To such a Rex
All greatness will kneel down !

(10)

### Terms expounded

*pakaṭi* - fickleminded
*calam* - falsehood
*maṭi* - sloth]

### *Exposition*

"At the sight of sun, darkness runs away!

Similarly, because *of* Justice, the three will vacate occupation - wavering *mind, untruth* and slothfulness.

A Rex should embrace always, such a Justness!

He should susppress the domination of dullards!

A Rex should, on the *contrary*, make the erudite to keep their head high!

Only such a Rex is virtuous!"

# 78

## அவன் கொடுங்கோலன் !

நல்லாகு நீதியினைக் கேள்விபெற
நடத்துவோன் எவனவனே தெய்வம் !
கல்லாத மூடரிதன் பெருமையினை
அறிவாரோ? கருக்கனியக் கற்றோர்
எல்லோரும் புகல்வரிது வரசனுக்கே
உரித்தாமன்றிக் குணங்கள் ஒன்றும்
இல்லாமல் இதற்கெல்லாம் மாறுபடுங்
கொடுங்கோல்என் பார்கள் மிக்கோர் !

(11)

### பொருட்குறிப்பு

[எவனவனே = எவன் + அவனே
மூடரிதன் = மூடர் + இதன்
புகல்வரிது = புகல்வர் + இது
புகல்வர் - கூறுவர்
கருக்கனிய - உட்பொருள் விளங்குமாறு]

### விளக்கம்

"ஓர் அரசன், நீதியோடு ஆட்சி நடத்தினால், அவனே தெய்வம் !

இந்த அருமையைக் கல்வி கற்காதவர்கள் அறியமாட்டார்கள் ! உட்பொருள் வெளிப்படுமாறு நன்கு கற்றவர்களே உணர்வர்!

நீதியோடு ஆட்சி செய்வது 'அரசன்' என்று சிறப்பித்துக் கூறப்படுபவனின் இலக்கணம் !

நீதிக்கு மாறாக நடக்கும் அரசனைக் கொடுங்கோலன் என்பார்கள்!''

# 78

## He is a tyrant !

God is he who rules with Justice !
Only the learned scholars can attest this !
What will know about this the air - headed ?
Despot is he who despises Justness !

(11)

### Terms expounded

[evanavanē = evan + avanē
mutar + itan = mutaritan
pukalvaritu = pukalvar + itu
pukalvar - will tell
karukkaniya - *until the hidden truths* blossom out]

### Exposition

"When a Rex rules hisl and with a sceptre of Justice, he will be deemed as a God!

But, dolts will *not* understand this!

Only scholars who have studied deep, will grasp this!

If only a Rex's way is full *of* morality, he can be called as a King!

If he does not follow the path of virtue, then his name is different - Despot !"

## 79

### பெரியோர் யார் ?

அரசனுமே செங்கோலைத் தானாக
  நடத்துவனேற் பகைவரால் கெடுவர் !
அரசனுமே தன்னையுந்தன் செங்கோலும்
  அறிவினர்கைப் படுத்துவதாம் முறைமை!
அரசனையுஞ் செங்கோலுங் காத்தவன்தன்
  பகைதீர்த்தல் அறிஞர்கடன் ! அதனால்
அரசுக்கும் செங்கோற்கும் நீதிக்கும்
  உலகுக்கும் அறிவினரே பெரியோர் !

### பொருட்குறிப்பு

[நடத்துவனேல் - நடத்துவானாகில்
காத்தவன்தன் = காத்து + அவன்தன்]

"செங்கோல் செலுத்தும் அரசன், அதைத் தன்னிச்சைப்படி செய்யக் கூடாது!

அப்படிச் செய்தால் பகைவரால் வெல்லப்படுவான்!

அரசனானவன், தன்னுடைய நடவடிக்கைகளையும், தனது செங்கோல் முறைகளையும், பெரியோர் அறிவுரைப்படியே அமைக்கவேண்டும்!

இப்படிச் சொல்லும்போது, அந்தப் பெரியோர்கள் எனும் அறிஞர்களின் கடமை யாது?

அரசனைக் காப்பாற்றவேண்டும்; செங்கோல் நெறியைக் காக்கவேண்டும்; பகைவரால் அரசன் அழியாதவாறு காப்பாற்ற வேண்டும்!

இப்படி இருப்பதால், அரசர்க்கும், நீதிக்கும், செங்கோலுக்கும், ஏன்? இந்த உலகு அனைத்திற்கும் பெரியவர் யார்? என்ற வினா வந்தால், "அறிவுடையோர்" என்பதே விடையாக இருக்க வேண்டும்!"

## 79

### Who are superiors ?

If a potenate administer his sceptre on his own,
Definite it is, he will be ruined by opponents !
Rex should submit him and his sceptre
Unto the sages !
Obligation of the wise it is
To protect the Rex, his sceptre
And ruining of Rex's enemies !
So it must be confessed
Superiors are the enlightened
To king, his sceptre, equity and the whole world !

(12)

### Terms Expounded

[naṭattuvaṉēl - if he manipulates
kāttavantaṉ = kāttu + avantaṉ]

### Exposition

"The king who is ruling, should not wield his sceptre by his own choice !

If he does so, his enemies will demolish his kingdom!

The king should do all transactions of his government only on the basis of the advice of the enlightened !

Then, what are the obligations of the sages?

They must protect the king from his enemies. They must preserve the name and fame of the potentate!

So, in this way, for the whole world, king, king's sceptre and justice, only the erudite are the superiors!"

## 80

### அறிவினர் கடமை !

*அரசனது கூறாகும் அதிகார நியாயந்தான்*
*அறிவினந்தம் கூறாம்*
*ஒருமைகொண் டாங்கரசு முதலுலகத்துக் கேற்றனவும்*
*ஆராய்ந்து கொண்டே*
*மருவியகா ரியமறிந்தால் கவற்றான்மேல் வருவனவும்*
*இறந்தனவும் அறிந்தே*
*அரசனையே பெரிதாக்கொண் டதிகாரம் நடத்துவதாம்*
*அறிவினர்தம் கடமை !*

*(13)*

### பொருட்குறிப்பு

*[இறந்தன - முன் நடந்தவை]*

### விளக்கம்

"அதிகாரம செலுத்துதலும், நியாயம் வழங்குதலும் அரசனுடைய நேரடிக் கடமைகள்!

எனினும், உண்மையில், அவற்றைப் புரியவேண்டியது அறிவாளிகளே!

உலகத்துக்கு ஏற்றது இன்னது என்பதை ஆராய்ந்து, கடந்தகால அனுபவங்களைக் கொண்டு இனிமேல் வரப்போகின்றவற்றை உணர்ந்து, அரசனை மதித்து, அந்த அரசனையே முன்வைத்து, அதிகாரம் செலுத்தவேண்டியது அறிவுடையோரே!"

# 80

## Erudite should be behind the scene !

Authority and Equity
Both part and parcel of King
As well as Prodigies !
Taking into consideration all—
Past, present and future
The sages should administer all
Remaining at the rear side of the screen
Allowing to occupy the front side by the king !
(13)

### Terms expounded

[irantana - past events]

### Exposition

"To rule over and render equity are the obligations of rulers !

But, it is equally the obligations of the prodigies !

Only the wise should weigh the pros and cors, past and future, welfare of the state and advise the potentate!

Keeping in the fortline the Rex, only the wise should rule the country!"

# 81

## பழையனவும் புதியனவும் தேவை !

பழைமைதான் நன்றாகில் அவற்றினையே தொடுதல்தான்
புதிதினுக்கு நன்றாம்!
பழைமைதான் வழுவாகில் அவற்றினையே கழிதல்தான்
பழுதும் அன்றாம்!
பழையனவும் புதியனவும் சீர்தூக்கிப் புகுதலே
மனிதர்தன் நீதி!
பழையனவும் புதியனவும் இரண்டுமிரு காலாகித்
தொடரும்நதிக் கெனவே!

(14)

பொருட்குறிப்பு

[கால் - வழி
நதிக்கு - நதியை நோக்கி]

விளக்கம்

"பழைய கருத்துகள், செயல்கள் நல்லனவாகில், அவற்றை நாம் எடுத்துக்கொள்ள வேண்டும்! புதிய கருத்துகள், புதிய செயல்களோடு இவற்றை இயைத்துக் கொள்ள வேண்டும்!

பழைய வழி தவறானது என்றால், அவற்றை விட்டொழித்து விடவேண்டும்,

ஆகவே, பழையதாயினும், புதியதாயினும் நன்கு ஆராய்ந்து, எடுத்துக்கொள்ள அல்லது தள்ள வேண்டும்!

பழையனவும் புதியனவும், இரு வாய்க்கால்களாக ஒரு நதியை நோக்கி ஓடவேண்டும்!"

# 81

## What are Old and New !

Old, if it is good, should be invited
So, that New can prosper !
Old, if it is bad, should be despised !

Old or New, proper analysis is a must
To adopt or execrate!
Old and New are two books
Converge at a river!

(14)

**Terms Expounded**

[kāl - path
natikku - towards river]

**Exposition**

"We should not execrate the old, if it is valuable and great we should annexe it with our new ideas.

At the same time, if the old ways are good for nothing, we should despise it.

So, whether it is old or new, we have to ponder over deeply before embracing it.

Actually, old and new are the twin rivulets running towards a river!"

**நீதியின் அதிகாரவரை**
**உரைக்கின்றது**

- கவி 9

**கண்டிப்பு**

## 82

**ஒழுங்கு வகைகள் !**

*அரசனது செங்கோலை நடத்துங்கால்*
*துலைபோலும் நடுநிலையில் நிற்றல்*
*கருமத்தின் காரணமும் காரியமும்*
*நாடலதின் இடங்காலம் மூன்றின்*

விரிவெல்லாம் அறிதலுத்தி இரண்டும்கை
விடாமல்தன் விழிபோலும் கோடல்
இருவர்வழக் குறில்பேதம் அறமுரைத்தல்
கண்டிப்பீர் ஐந்ததினோ டொன்றே!

(1)

## பொருட்குறிப்பு

[துலை - தராசு
நாடலதின் = நாடல் + அதின்
வழக்குறில் = வழக்கு + உறில்
கண்டிப்பீர் ஐந்தினோடொன்றே =
கண்டிப்பு + ஈர் + ஐந்தினோடு + ஒன்றே]

## விளக்கம்

''அரசன் என்பவன், தனது ஆட்சிச் செங்கோலை நடத்தும் போது. ஒழுங்கைக் கடைப்பிடிக்க வேண்டும்!

இந்த ஒழுங்கானது, பதினோரு பிரிவுகளைத் தன்னகத்தே கொண்டது!

அவையாவன:-

1) நடுநிலை
2) காரணம்
3) காரியம்
4) இடம்
5) காலம்
6) விரிவு அறிதல்
7) உத்தி
8) கைவிடாதிருத்தல்
9) தன் விழிபோல் கருதுதல்
10) பேதம்
11) அறமுரைத்தல்

1) துலாக்கோல் போல நடுநிலை காத்து ஒரு பக்கம் சாயாமல் இருந்து அரசன் ஆள வேண்டும்!

2) எந்தச் செயலுக்கும் உரிய காரணத்தைக் கண்டுபிடித்து, அதன் பிறகு ஒரு செயலில் இறங்கவேண்டும்.

3) செய்யும் செயல் பற்றி முதலில் நன்கு அறிந்து கொள்ள வேண்டும்.

4) இடமறிந்து வினையாற்றுதல்ல சுறநதது.

தான் செய்யும் செயலானது எந்த இடத்தில், அவ்விடத்தின் வலிமை யாது, என்பனவற்றை நன்கு அறிந்து செயலாற்றல் நன்று.

5) எதனைச் செய்யும் முன்பும், வினையின் காலம் இன்னது என்று நன்கு தெரிந்தே, அச்செயலில் இறங்கவேண்டும்!

6) தான் செய்யப் போகும் செயல் பற்றி விரிந்த முறையில், எல்லாக் கூறுகளையும் உள்ளடக்கி, அரசன் ஆய்ந்து தெளிதல் வேண்டும்.

7) தகுந்த உத்தியைக் கடைப்பிடித்து, அரசனானவன் அரசாட்சியைச் செலுத்திக் கொண்டு போதல் தேவையாகும்!

8) எடுத்த செயல் எதையும் இடையே கைவிட்டு ஓடாமல், அதனை முடித்துக் காட்டுதல் அரசனுக்கு அணி!

9) அரசாட்சியானது தனது விழி எனக் கருதுதல் வேண்டும்! கருதி, ஒழுங்கைக் கடைப்பிடித்து, அதில தவறு ஏதும் நேரா வண்ணம் காக்கவேண்டும்!

10) ஒழுங்கான ஆட்சிக்குப் பேதம் செய்யப்பட வேண்டும். அஃதாவது, எதிரிகளை இனம்கண்டு, அவர்களுள் வேற்றுமை ஏற்படுத்த வேண்டும்!

11) அறத்தை மக்களுக்குப் போதிக்க வேண்டும்!"

# 82

## Divisions in discipline !

A Rex while ruling
Should adopt eleven ways
To make is sceptre upright !
Impartiality, Reason and knowlege of deed !
Apart from Place, Time, Depth !
In addition to Technique, Diligence and vigilence
Along with Dissension and Preaching !

(1)

### Terms Expounded

[tulai - scale
nāṭalatin = nāṭal + atin
vaḻakkuṟil = vaḻakku + uṟil
kanṭippīraintinōṭonṟē = kanṭippu + īr + aintinōṭu
+ onṟē]

### Exposition

"In wielding the sceptre, Rex should maintain discipline through eleven modes.

They are :-

1) Impartiality
2) Reason
3) Deed
4) Place
5) Time
6) Depth
7) Technique
8) Persverence
9) Fostering
10) Differentiation
11) Preaching morals

1) A potentate should stand upright without siding one party like a balance.

2) He must analyse the basic reason for any act.

3) He should squarely come to know the action first.

4) The place at which any performance is to be accomplished is important.

5) Ripe time is essential for consummation.

6) An in depth analysis of any activity should be undertaken by the king.

7) Proper technique is a must on the part of a potentate.

8) Finishing of any act is essential. He should not leave in the middle.

9) He should foster his people and their welfare just like his own eyes.

10) He should sow dissension between enemies.

11) He must teach the subjects moral ways."

## 83

### ஒருமைச் சுற்றம்!

ஒருமைச்சுற் றம்பெருகப் பகைசுருங்கும் எளல்அதுவும்
உரைசெயலின் வன்மை
தெரிதலுடன் அனுபவங்கொண் டறிஞரொடு தேறியபின்
தொடங்குதலும் என்ப
ஒருமைக்கே இடமாமுப் பகையிலாதி ருத்தல்பொருள்
படையும் கூட்டல்
அரணுடைமை குடிமைசெயல் வகையறிதல் வாணிபமும்
அறிதலுமாம் பின்னும்!

(1)

### பொருட்குறிப்பு

[சுற்றம் - உறவு
தேறியபின் - ஆராய்ந்தபின்னர்]

### விளக்கம்

"அரசனின் நற்செயல்களால் அவனுக்கு ஆதரவு கூட்டம் சேரும்!

அந்த உறவால், பகையானது குறையும்!

அரசன், அனுபவம் மிக்க அறிஞர்களைக் கலந்து, அதன் பின்னர் ஒரு முடிவுக்கு வரவேண்டும்.

அரசனுக்கு இருக்கும் ஆதரவால்தான் அவன் பகையிலா திருப்பது, படை சேர்ப்பது, பொருள் சேர்ப்பது அரண் பெறுவது வாணிபம் நடத்துவது, கோலோச்சுவது எல்லாம் செவ்வனே நடந்தேறும்!"

இப் பாடலில், திருக்குறள் அதிகாரப் பெயர்கள் பயின் றுள்ளமை காணலாம்.

# 83

## Support of like minded !

Rex should muster strength
Of like minded friends and people !
With this only he can
Reduce his enemies,
He can — add soldiers for his army
Can increase his trade
Can fortify his fort
And what not ?
Before coming to a conclusion
Duty it is his to consult the egg headed !
(2)

### Terms Expcunded

[curram - relation
teriyapin - after consultation]

### Exposition

"A king should add up strength from his well-wishing society.

Only then, he can eradicate the enemies around him.

Not only that. He should consult, before coming to a conclusion, with experienced egg headed.

If he so behaves, he can strengthen his fort, army, trade and the wellfare of his subjects!"

In this stanza, our bard has written some chapter titles of *Thirukkural.*

# 84

## சாமத்தின் கூறுகள்!

பெரியார்க்குப் புரிந்திடுதல் மூன்றாகும்
வணக்கமும் பேருபசாரம் இன்சொல் !

சரியான பேர்க்கிரண்டாம் உபசாரம்
இன்சொல்! தாழ்ந் தவர்கள்தமக் கெல்லாம்
ஒருவிதமாம் இன்சொலிவை அறிதலுடன்
ஒப்புரவை உறவறிதல் தானும்
வருகின்ற சாமத்தின் கூறாகும்
பதினாறு மற்றுமிது கேண்மின்!

(3)

பொருட் குறிப்பு

[ஒப்புரவு - சமம்
சாமம் - சமாதானம்]

**விளக்கம்**

"பெரியோரைக் கண்டால் நாம் செய்யவேண்டியன மூன்று— வணக்கம், உபசரித்தல், இனிய சொல் கூறுதல்.

நமக்கு ஈடானவர்களைச் சந்திக்குமிடத்து நாம் செய்ய வேண்டியன இரண்டு — உபசாரம், இன்சொல்.

நம்மினும் தாழ்ந்தவர்களைக் கண்டால், நாம் செய்ய வேண்டியன ஒன்று — இன்சொல்

இந்தப் பண்புகளுடன், அனைவரையும் சமமாகப் பார்த்தல் எனும் பண்பும் சேர்ந்து, சாமம் என்பதன் கூறுகளாம்!"

# 84

## Conciliatory measures !

When meeting bigwigs —
We have to do *three* —
Salutation, Civility and Kind words !
When with equals, *two* —
Civility and Sweet words !
When with below us, *one* —
Nice words !

Along with these add Equality
To arrive at the components of Conciliation !
(3)

**Terms expounded**

[oppuravu - levelness
cāmam - conciliation]

**Exposition**

"When we meet men of excellence, we have to do *three* - Obeisance, Treating with civility, and Sweet words.

If we meet men of equal rank, we have to do *two* - Civility and Nice words.

When we happen to meet men of below rank, we have to do *one* - Tender words.

Cāmā is nothing but these elements along with booking upon all with equal eye."

## 85

### பேதம், தானம், தண்டம் !

தெரிதல்பகைத் திறந்தூதால் அதற்கேற்ற கருவியெலாம்
தெரிதலோ(டு) இன்னும்
வருகின்ற சத்துருநா சனம்புரிதல் வகைமூன்றும்
**பேதத்தின்** கூறாம்
கருமங்கள் தனைவேண்டி ஈகையது கைக்கொடுத்தல்
அதுவாகும் **தானம்** !
முறைதரும நீதிநெறி தப்பினரைத் தண்டித்தல்
அதுவொன்றே **தண்டம்** !

(4)

பொருட் குறிப்பு

[தூதால் - தூதுவரால்
சத்துரு - பகைவர்
நாசனம் - அன் சாரியை பெற்று வந்தது]

### விளக்கம்

"பகைவர்களின் வல்லமையைத் தூதுவர்கள் மூலமாக அறிந்து வைத்திருத்தல், பகைவர்கள் மற்றும் அவர்களின் படைகள் போன்ற எல்லாவற்றையும் அறிதல், பகைவர்களை அழித்தல் என்ற இந்த மூன்றும் பேதம் என்பதன் பிரிவுகள்.

ஒரு செயலை நிறைவேற்றுவதற்காகப் பிறருக்குப் பொருள் கொடுத்தல், தானம் என்ற பிரிவில் அடங்கும்.

தருமத்தின் வழியை விட்டு, அநீதி வழியில் செல்வோரைத் தண்டிப்பதே, தண்டம் ஆகும்!"

## 85

## Dissension, Munificence and Chastisement !

Components are three for *Dissension* -
Spying, Knowing enemy's strength and Smashing
Liberality to achieve ends
Is termed as *Bounty !*
Castigating those opposite to morality
Is denoted as *Chastisement* !

(4)

### Terms expounded

[tūtāl - through spy
Catturu - an antagonist
nācaṉam - euphonic extension 'aṉ' has been utilised]

### Exposition

"Employing spy, grasping foe's strength, and demolishing them fall under *Dissension.*

Giving bounty to achieve king's ends is called *Liberality.*

Chastising the adversaries is nothing but *Castigation*".

# 86

## தருமம்!

அரியபிழை செய்தவர் பிழைசெய்தேன் யானெனவே
 சரண்புகுந்தால் பொறுத்தல்
அரியசுற்றம் தனைக்காத்தே தழுவுதலோ டடைந்தாரைக்
 காத்திடுதல் தானும்
திருவமரும் மனைமாட்சி மணந்திருத்தல் அரிமகப்பே(று)
 உண்டாதல் தானும்
தருமமனை மக்கள்மேல் தகுமன்பு வைத்தலும்
 உபகாரம் புரிதல்!

(5)

### பொருட்குறிப்பு

[அரிமகப்பேறு - அரியமகப்பேறு;

தொகுத்தல் விகாரம்]

### விளக்கம்

"தருமம் என்பது யாது?

(1) ஒரு பிழையைச் செய்தவர், "நான் பிழை செய்து விட்டேன்" என்று மன்னிப்பைக் கோரினால், அவனுக்கு மன்னிப்பு வழங்க வேண்டும்!

(2) சுற்றத்தாரைப் பாதுகாத்தல் வேண்டும்!

(3) சரண் அடைந்தவர்களைக் காப்பாற்றுதல் வேண்டும்!

(4) திருமணம் செய்து கொண்டு,

(5) குடும்பத்தாரைப் பேணி,

(6) பிள்ளை பெற்றுக் கொள்ள வேண்டும்!

(7) மக்கள் மீது அன்பு வைக்க வேண்டும்.

(8) பிறருக்கு உதவி செய்தல் வேண்டும்!

இவையே தருமம்!"

அரசனுக்கும் குடிமக்களுக்கும் சேர்த்து மொத்தமாகக் கூறப் பட்ட தரும இலக்கணம் இது!

இல்லறம், துறவறம் இரண்டில் இல்லறத்தார் தருமமே சிறந்தது என்ற குறிப்பும் இங்கு உள்ளது.

# 86

## Virtuous obligation

Ingredients of Virtuous obligation
Are enumerated apart from Bounty
As Pardoning, Embracing of relatives
Protecting the refugees, Marrying
And begetting child
Along with nurturing members of family !

(5)

### Terms expounded

arimakappēru - ariyamakappēru; Loss during combination]

### Exposition

"What is virtuous obligation?

When a person asks for pardon, it should be granted.

The relatives should be embraced.

The refugees should be saved at all costs.

One should enter into family life, beget issue and foster the members of the family.

One should be munificent.

All combined is known as Virtuous duty!"

This definition, it seems, covers both the subjects and the monarch.

Between Domesticity and Recluse life, this author seems to side for Domestic life.

# 87

## தருமத்தின் கூறுகள் !

பெரியாரை வணங்கிடுதல் அவர்களையே பின்தொடர்தல்
கண்ணோட்டம் அறிதல்

பரிவாகத் தாழ்ந்தவரைக் கைப்பற்றி ஆதரித்தே
உயர்த்துதலோ டின்னும்
ஒருவர்சம் மதமென்னும் ஒப்புரவை அறிதலுடன்
நட்பினையும் காத்தல்
பரிவாகப் படிப்பித்தல் யார்க்குநோய் தீர்த்தலிது
பதினாறும் தருமம்!

பொருட்குறிப்பு

[கண்ணோட்டம் - இரக்கம்
ஒப்புரவு - ஒற்றுமை]

**விளக்கம்**

"கீழ்வருவன தருமத்தின்பாற்படும்!

(1) பெரியோரை வணங்குதல், (2) அவர்கள் காட்டும் வழியில் நடத்தல், (3) கருணை காட்டல், (4) தாழ்ந்தவரை ஆதரித்துத் தூக்கிவிடுதல், (5) ஒற்றுமையாக இருத்தல், (6) நட்பைக் காத்தல், (7) பிறருக்குக் கல்வி வழங்குதல், (8) நோய் தீர்த்தல் ஆகிய இந்த எட்டும், இதற்கு முந்தைய பாடலில் ஓதப்பட்ட எட்டும் ஆக மொத்தம் பதினாறும் தருமம் ஆகும்!

# 87

## Components of virtuous obligation !

Altogether sixteen in number
Are the branches of virtuous obligation !
Obeisance unto great men
Adopting their moral path
Having soft corner for down trodden
Uplifting the same
Striving for union
Nurturing friendship and rendering education
Along with striving to cure ailments !

(6)

### Terms expounded

[kaṇṇōṭṭam - mercy
oppuravu - union

### Exposition

"Along with the eight sections contemplated in the previous stanza, the following eight also belong to the definition - Virutous obligation :-

1. Respect to men of excellence
2. Following their footprints
3. Showing mercy
4. Encouraging the needy
5. Remaining in unity
6. Fostering friendship
7. Rendering education
8. Curing the diseased.

## 88

### உண்மை !

கரைவாய்மை காத்திடுதல் கற்புடைமை
காத்திடுதல் இழிவதனின் நாணல்
பெருமையெனும் தலைமைதனைக் காத்திடுதல்
புகழ்காத்தல் வரன்முறையும் ஓம்பல்
சரியாகத் தயிரியமுறு சவுரியமும்
வெற்றியுடன் செல்வநிலை காத்தல்
உரைபழிச்சொல் அஞ்சலுடன் சிறியவினஞ்
சேராமை பனிரெண்டாம் உண்மை !

### பொருட்குறிப்பு

[கரை - கூறு
இழிவதனின் = இழிவு + அதனின்
சவுரியம் - வீரம்]

### விளக்கம்

"உண்மை எனப்படுவது யாது?

கீழ்வரும் பன்னிரண்டும் உண்மை என்பதன் கூறுகள் :-

1. வாய்மை
2. கற்பு
3. இழிவுக்கு நாணுதல்
4. பெருமை
5. புகழ்
6. வரன்முறை
7. தைரியம்
8. வீரம்
9. செல்வம்
10. பழிச்சொல்
11. அஞ்சல்
12. சிற்றினஞ்சேராமை

## 88

### Truth !

Components are twelve
For the principle Truth —
Veracity, Chastity and Shy to meanness
Greatness, Renown and Discipline
Along with Boldness, Valour and Richness
In addition to sky to aspersion
And Fear to evil and Avoidance of evil
company !

(7)

### Terms expounded

[karai - tell
iḻivataṉin = iḻivu + ataṉin
cavuriyam - valour

### Exposition

"What is ultimatel Truth?

The following are the twelve of its divisions :-

1. Veracity
2. Chastity
3. Shy to baseness
4. Greatness
5. Fame
6. Order

7. Courage
8. Fortitude
9. Wealth
10. Shunning aspersion
11. Fear to vileness
12. Execration of bad company

(7)

## 89

### ஞானம்

ஒருவன்தான் காலத்திற் செய்நன்றி தனையறிதல்
பொச்சாப்பொன் றின்மை
அரியஅறி வொருகல்வி அறிதலுடன்
காயநிலை தெய்வநிலை அறிதல்
மருவாது சினமறுத்தே சாந்தத்தை
அடைதல்பிறர் இன்னாச்சொல் பொறுத்தல்
ஓருவனது குறிப்பறிதல் உரியகடவுளை
நினைத்தலின் னுமிது கேண்மின் !

(8)

### பொருட்குறிப்பு

[பொச்சாப்பு - பொறாமை
நினைத்தலின்னுமிது = நினைத்தல் + இன்னுமிது]

### விளக்கம்

ஞானமாவது யாது?

இதனுடைய பிரிவுகளைக் கேளுங்கள் :-

1. செய்ந்நன்றியறிதல்
2. அறிவு
3. கல்வி
4. உடல்நிலை அறிதல்
5. கடவுள் நிலை அறிதல்
6. சினமறுத்தல்
7. சாந்தம்

8. இன்னாச்சொல் பொறுத்தல்
9. குறிப்பறிதல்
10. கடவுளை நினைத்தல்

இன்னும் சில உள!"

## 89

### Wisdom !

Following are the divisions
For the value Wisdom !
Gratitude, knowledge and Education
And knowledge of Body as well as God
Along with Despising spleen
Also Calmness and patience
In addition to shrewdness and worship of God !
(8)

#### Terms Expounded

[poccāppu - jealousy
niṉaittaliṉṉumitu = niṉaittal + iṉṉumitu]

#### Exposition

"What is Wisdom?

Let me enumerate its parts first :

1. Gratitude
2. Knowledge
3. Education
4. Knowledge about body
5. Knowing of God
6. Quelling spleen
7. Quietness
8. Tolerating reproach
9. Knowing the intention
10. Worshipping God

There are a few more !"

# 90

## ஞானத்தின் பிரிவுகள் !

அடுத்தவர்கட் கெல்லாந்தான் அறிவதனைத் தெளிவித்தல்
புறக்காமம் அடக்கித்
தடுத்தனமிகு மானிடர்தஞ் செயலுடனே தெய்வத்தின்
செயலாமீ திரண்டும்
எடுத்தறிதல் வீணான காரியத்தில் அவாவின்மை
இவைகள்பதி னாறும்
அடுத்ததொரு ஞானத்தின் கூறாகும் அறிஞர்மொழிந்
தவ்வடிவும் இதுவே !

(9)

பொருட்குறிப்பு

[தடுத்தனம் - எதுகை நோக்கி வந்தது; தடித்தனம்]

### விளக்கம்

ஞானத்தின் கூறுகளாக முந்தைய பாடலில் 10 கூறுகள் காணப்பட்டன!

இந்தப் பாடலில் மேலும் 6 கூறுகளைக் கூறுகிறார், நூலாசிரியர் **நாகைச் சத்தியஞானி!**

அந்த ஆறு கூறுகள் :-

1. தான் அறிந்ததைப் பிறருக்குக் கூறி, அவருக்கு ஒரு தெளிவை ஏற்படுத்துதல்.
2. புறக்காமம் அடக்குதல்
3. மானிடர்களின் செயல் இவ்வளவே என அதன் வரையறையை உணர்தல்.
4. தெய்வத்தின் செயல் இந்த அளவு என அதன் வரையறையை உணர்வது.
5. வீணான செயல்களில் ஈடுபடாதிருத்தல்.
6. ஆசையை விட்டொழித்தல்.

இப் 16 கூறுகளையும் கொண்டவன் எவனோ அவனே ஞானி!

இவற்றில், **புறக்காமம்** என்று **நாகைச் சத்தியஞானி** குறித்தது சிந்திக்கத் தக்கது! சிறந்தது!

அகக்காமம் இருப்பதால், எவருக்கும் தீங்கு பிறவாது!

ஒருவனிடத்தில் அகக்காமம் இருந்தால் அதனால், பிறருக்கு என்ன இழப்பு?

ஒன்றுமில்லை !

ஆனால், வெளிப்படையாக ஒருவருடைய காமத்தைக் காட்டக் கூடாத இடத்தில் காட்டினால்தான், சிக்கல் ஏற்படுகிறது!

இதைத்தான் புறக்காமத்தை அடக்குதல் ஞானத்தின் கூறாகும் என்றார் நாகைச் சத்தியஞானி எனும் நமது நூலாசிரியர்!

# 90

## Wisdom continued !

Total sixteen are parts
Of the concept Wisdom !
Inclusive of clarifying, Suppressing lust
And the Limit of humans as well as God
Along with Sparning of unnecessary acts
And Removal of passion !

(9)

### Terms Expounded

[taṭuttaṉam - rashness; Impact of the Initial rhyme of the previous line.]

### Exposition

Ten branches of Intellect had been seen in the previous stanza !

In this verse, 6 more are being recounted by our bard Nagappattiṉam Satya gñāṉi !

Those six are :-

1. Giving a serene picture of that which is under stood by one
2. Suppressing the outward concupiscence

3. Knowing the boundary of humans
4. Grasping the limit of God
5. Indulging in unwanted acts
6. Removal of strong inclination

So, in toto, an Intellect is one who possesses the above explained 16 !

In this stanza, our bard's noting of 'outward cupidity' is noteworthy.

Because, inward lust will not harm anybody !

Whereas, outward libidinous-activity only brings in all evils !

**அநீதியின் அதிகார வகை உரைக்கின்றது !**

— கவி 5

## 91

### *எல்லாம் அநீதி !*

*அரசனறி விலர்க்கூடி அறிவினரை இகழ்ந்துகொடுங்*
*கோலினையே செலுத்தல்*
*ஒருமையின்றி மனிதர்களை உட்பகையாய் விகடித்தல்*
*யோசனையும் இன்மை*
*வருகின்ற சத்துருக்கள் மேலிடுதல் காரியத்தில்*
*ஆமைவி தண்டம்*
*புரிதலுவ கார்த்தார்க் கபகாரம் நடுவின்மை*
*நன்றில்லாச் செல்வம் !*

(1)

பொருட்குறிப்பு

*[ஒருமை - ஒற்றுமை*
*விகடித்தல் - பிரித்தல்*
*விதண்டம் - தகராறு*
*நன்றில்லாச்செல்வம் - தீயவழி வந்த செல்வம்]*

### விளக்கம்

கீழ் வருபவைகள் அநீதியின் பாற்படும் என ஆசிரியர் நாகைச் சத்தியஞானி அறைகிறார்:-

(1) அறிவற்றவர்களோடு உறவாடிக் கொண்டு, அறிவாளிகளைத் தாழ்த்துதல்;
(2) கொங்கோல் செலுத்துதல்
(3) மக்களிடையே பிளவுகளை உண்டாக்கி, அவர்தம் ஒற்றுமையைக் குலைப்பது.
(4) முன்யோசனை இவரது, எதிரிகளிடம் தோற்பது
(5) செயலில் விரைவின்மை; எதிலும் பூசல் கொளல்
(6) உதவி செய்தவர்க்கே தீங்கு செய்தல்
(7) நடுவு நிலை தவறுதல்
(8) தீய வழியில் செல்வம் ஈட்டுதல்

## 91

### All is inequity !

It is inequity and nothing but inequity
To humibate the wise joining hands with dopes !
To arrogantly rule over !
To bifurcate people causing disputes internal !
To embrace defeat at the hands of enemy
without precaution proper !
To execute acts in a pace slow !
To do harm to those who help !
To lose balance !
To garb wealth by means fraudulent !

(1)

### Terms Expounded

[orumai - unity
vikaṭittal - pirittal
vitanṭam - dispute]

**Exposition**

The following, according to our bard Satyagñani of Nagappattanam, fall under Unrighteousness :-

1. Joining hands with the vile, harming the learned
2. Ruling in an unjust way
3. Making divisions among the subjects
4. Without proper thinking, getting defeat at the hands of enemies
5. Slumber in activities
6. Doing worst to even those who did good
7. Adopting inequality
8. To amass wealth by unlawful methods.

## 92

### அநீதியே !

*வைவாக வொருவர் சொல்லும் பழிச்சொல்லுக் கஞ்சாமை*
*வரன்முறையும் இன்மை*
*செய்கையறி பெரியோரைப் பேணாமல் பழித்திடுதல்*
*செறிதிருவின் மிக்கார்*
*மெய்வந்த செல்வத்தைக் கண்டவர்மேல் பொறாமை*
*யொன்று*
*புரிதல்புறங் கூறல்*
*செய்ததனைக் காணாமல் பொய்ச்சாட்சி செப்புதலோ(டு)*
*இன்னாமை கூறல் !*

*(2)*

பொருட்குறிப்பு

*[வைவாக - வசவாக*
*திருவின் மிக்கார் - செல்வர்]*

**விளக்கம்**

*"கீழ் வருவன யாவும் அநீதிகளே ! :-*

1. *பழிச்சொல்லுக்கு அஞ்சாமை*
2. *வரன்முறை இன்மை*

3. பெரியோரைப் பழித்தல்
4. செல்வர் மீது பொறாமை கொள்ளுதல்
5. புறங்கூறுதல்
6. பொய்ச்சாட்சி சொல்லுதல்
7. இன்னா கூறல்"

# 92

## Also unjust !

Categorised the following will be
Into the division Unrighteous
To pay no heed to charges
To follow no path of discipline
To calumny the great
To have jealousy upon the wealthy
To asperse at people indiscriminately
To render witness falsely quite
To utter words so sordidly !

(2)

### Terms Expounded

[vaivāka - by way of daunting
tiruvin mikkār - wealthy]

### Exposition

"The following are, undoubtedly, the unrighteous acts:-

1. To wink at the charges
2. To lose discipline
3. To degrade the wise
4. To feel jealousy upon the well - off
5. To indulge in mud slinging
6. To depose without conscience
7. To fling sordid words."

# 93

## சிற்றாண்மைத் தீது !

தப்பிதமிலா ரிடத்தில்வெகுண் டிடுதல்
அடைந்தாரைக் கெடுத்திடுதல் தானும்
தப்பில்சவு ரிமிலாதி ருத்தல்
பெருமையுமின் மைதீமை நாணாமை
செப்பமிலாப் புல்லறிவிற் றனைப்போலும்
இல்லையென்றே சிற்றாண்மை கோடல்
ஒப்பில்கட வுளைநினையா திருத்தல்
பொய்யேசொல் லுதலோடிது கேண்மின்

பொருட்குறிப்பு

[சவுரியம் - வீரம்]

விளக்கம்

"எந்தத் தவறும் செய்யாதவர் மீது கோபம் கொள்ளக் கூடாது!

தன்னைச் சரண் அடைந்தவரைக் கெடுக்கக் கூடாது.

ஒரு தவறு நடக்கும்போது, அங்கு வீரம் காட்டாது இருக்கக் கூடாது,

பெருமைக்குரியவராக இல்லாது இருக்கக் கூடாது.

தீமை செய்யும்போது, அதற்காக வெட்கப்பட வேண்டும்.

தன்னைப்போல ஒருவரும் அறிவிற் சிறந்தவர் இல்லை என்று அகம்பாவம் கொள்ளக் கூடாது!

கடவுளை நினையாது இருத்தல் கூடாது!

பொய் சொல்லக் கூடாது!"

# 94

## Pride is execrable !

Join the below coming
Into the category Unjustness !
To frown upon the goody - goody
To spoil any sought refuge

To keep mum at the sight of Injustice
To remain without any glory
To do base acts without shame
To keep head high as if omniscient !
To spurn worshipping God
To talk untruth ! (3)

**Terms expounded**

[cavuriyam - valour]

**Exposition**

"One should not get angry over the innocent.

One should always protect those who come unto seeking refuge.

Don't forget to show valour at the sight of inequity.

One should not live without name and fame.

Remain shameful when happen to do evil.

Don't keep your head high as if you are omniscient.

Never tell lies !"

## 95

### முப்பால் நீதி !

தனக்குரிய கல்வியினைப் பெறாமல் இருத்தல்
குடிதனைக் கெடுக்கும் மடிதான்
தனக்குரிய வரவின்றி வீணான வரவினையே
தழுவல்புறக் காமம்
தனக்குரிய சினத்தினையே மாறாமல் இருத்தல்
இழிவதனின் ஆண்மை
தனக்குரிய தெய்வத்தின் செய்வினையே நினையாமை
முப்பால்நன் னீதி ! (4)

பொருட்குறிப்பு

[மடி - சோம்பல்
முப்பால் - திருக்குறள்]

விளக்கம்

"முப்பால் எனப்படும் திருக்குறள், அநீதிகள் என்று கூறுவன வருமாறு :-

1. கல்வி பெறாது இருத்தல்
2. சோம்பியிருத்தல்
3. தானே பொருளீட்டாதிருத்தல்
4. காமம் கொள்ளுதல்
5. சினத்தை அடக்காதிருத்தல்
6. இழிவானவற்றில் ஆண்மைகாட்டல்
7. தெய்வத்தை நினையாமை"

# 95

## Moral by Thirukkural !

Execrated as Inequity
In the treatise Thirukkural are —
Remaining illiterate, quite lazily
Remaining without earning money
Remaining with lascivious tendency
Remaining with pride quite unduly
Remaining without the thought of god !

(4)

### Terms expounded

[maṭi - indolence
muppāl - Thirukkural]

### Exposition

Tamil didactic piece Thirukkural, proclaims the following as *injust* activities :-

1. To have no education
2. To embrace sloth
3. To have no income
4. To have concupiscence
5. To have no control over rage
6. To vaunt unnecessarily
7. To have no mind on god"

# 96

## உண்மை ஞானம் !

நெறியாக விச்சொன்ன கண்டிப்பும் தருமந்தான்
 உண்மையறி ஞானம் !
பிரியாத சாமபேதகங் களோடுதான தண்டம்
 அந்நீதி தானும்
முறையாக ஒன்றினது காரியந்தான் மற்றொன்றின்
 முறைமாறி வரினும்
அறிவாரே அறிவரிது அன்றியுமேற் கோளென்னும்
 விரிவிலறிந் திடுமே !

(5)

பொருட்குறிப்பு

[நெறியாக விச்சொன்ன = நெறியாக+இச்சொன்ன;
வகர உடம்படுமெய்
பெற்றது]

விளக்கம்

"இதுவரை கூறப்பட்ட ஒழுக்கமும், தருமமுமே ஞானம் ஆகும்!

சாம, பேத, தான, தண்டம் எனும் இந்நான்கையும் இதே வரிசையில் பயன்படுத்த வேண்டும்!

இருப்பினும், நடைமுறை வாழ்க்கையில் இந்த வரிசை மாறியும் வரலாம்! பகுத்தறிவோடு அதைக் கையாள வேண்டும்!"

# 96

## True Knowledge !

So explained Disciple and Virtue
Is nothing but Spirituality !
Correct order for deft execution is—
Compromise, Bifurcation, Munificence and
 Chastisement !
But changed may be this order
According to situation and deed !

(5)

### Terms Expounded

[neriyāka vicconna = neriyāka + icconna;
connecting 'va' appeared]

### Exposition

"*Sipirutality* is nothing but the Discipline virtue advocated thus far.

The four arts namely, Compromise, Division, Gift and Chastisement. may be employed in this order.

But, when situation - experience demands, the self same sequence may be altered."

பல திரட்டுமுரைக்கின்றது

கவி - 10

## 97

### இதுவே பயன்!

நல்லபிற விகள்நாலு விதமாகும்
அதுகுடற்பை புற்களும் ஒன்றாம்!
பல்லவித மாம்அண்டம் பூமிவேர்வையும்
என்பவே பகரு நன்னூல்
பொல்லுமிதில் அறிவுடைய மனிதருயர்
வர்உண்மை அறிவதே தவமாம்
இல்லறத்தின் வாழ்வாருக் கிதுவல்லால்
வேறுபயன் இல்லைநிச மாமே!

பொருட்குறிப்பு

[குடற்பை - கருப்பை
புற்கள் - புல் + கள்

### விளக்கம்

"கருப்பையிலிருந்து பிறப்பது, புல் போன்று தாவரமாகப் பிறப்பது என்று பிறவிகள் பலவிதமாகும்!

பூமி எனும் உடம்பிலிருந்து புறப்பட்ட வேர்வைத் துளிகளோ அண்டத்தில் உள்ளன என்று நூற்கள் நுவலுகின்றன!

இப்படிப்பட்ட உலகில், உண்மையை அறிந்து உணர்வதே தவம் எனப்படும்!

இல்லறத்தில் வாழ்பவர்களுக்கு இதைவிட வேறுபயன் ஏது?"

## 97

### This is the ultimate goal !

In this world on earth
Births are many and many
That one from matrix
And the one like grass
Are among them a few
All is said and done
The height of man depends virtually
On the trait called Truth
This is the end and aim
Of human life in this world !

**Terms expounded**

[kuṭarpai - matrix
purkaḷ - pul + kaḷ; pul - grass]

**Exposition**

"Deliverance into this world is of many modes!

One from a matrix, other like grass, so on and so forth!

The cosmos is nothing but drops of sweet issued from the body of earth!

In such a world, only knowing the Truth is termed as Penance!

This must be borne in mind in our mundane life!"

## 98

### புண்ணியம் அடைவரர் !

அறிவினர் நீதிநிறை கல்வியினை ஓதல்
அதினொழுக்க மேயொழுகல்

அறிவினர் நிறைகுணமும் ஓர்ப்பென்னும் பொறையுமே
அடர்ந்திதனைக் கற்றல்
அறிவினர்தம் மறவாத கடனென்னும் கடைப்பிடியும்
அறிந்திடுதல் தானும்
அறிவினர் இவ்விதத்தால் புண்ணியமும் நிறைதவமும்
அடைவார்கள் அன்றோ?

(2)

பொருட்குறிப்பு

[ஓர்ப்பு - பொறுத்தல்]

**விளக்கம்**

"அறிவாளிகள், கல்வி கற்று, அதற்குத் தக ஒழுகி, வாழ வேண்டும்!

நல்ல குணமும், பொறுத்தல் எனும் பொறையுடைமையும் கொண்டு திகழவேண்டும்!

தாம் செய்ய வேண்டிய கடமைகளிலிருந்து நழுவாது இருக்க வேண்டும்!

இப்படி ஒழுகினால், புண்ணியத்தையும், தவத்தையும் பெறுவார்கள்!"

## 98

## Obtain merit !

The Enlightened will obtain
Merit as well as Penance
By means of Education and Moral code
By means of executing Obligation
By means of Forbearance !

**Terms expounded**

[ōrppū - forbearance]

**Exposition**

"The intellectuals, educating themselves, should follow the path of morality.

Apart from good disposition, they should have forbearance!

They should not swerve from the their obligations!

When so behaving, they will obtain merit and penance!',

# 99

## மரமின்றி கனி விரும்பலாமா?

தெய்வமது உண்மையினில் இருக்குமென்றே போதநிறை
அறிந்தோர்கள் செப்புந்
தெய்வரிய செல்வஞ்சேர்ந் தருநல்லுண் மைதனை
நினைப்பவருக் கென்றும்!
தெய்வமதை உண்மையொன்று மின்றியிலே காண
விரும்புதல் உவமைதேரின்
பொய்வதியும் நெஞ்சினான் மரமின்றிக் கனிவிரும்பும்
போதமரை ஒக்கும்!

(3)

### பொருட் குறிப்பு

[இன்றியிலே - அல்லாமல்
தேரின் - தேர்ந்தெடுத்தால்
வதியும் - இருக்கும்]

### விளக்கம்

"பேசும் உண்மையில்தான் தெய்வம் இருக்கிறது!

இதை, நன்கு கற்றோர் உணர்வர்!

உண்மையின் படி வாழ்வோரிடம் அரிய செல்வமும் சேரும்!

உண்மையின்படி வாழாமல் இருப்பவர்கள், தெய்வத்தைக் காண முயலக்கூடாது!

உண்மையாய் ஒழுகாதார், "தெய்வத்தைக் காண்பேன்" என்றால், எப்படிப்பட்டதென்றால், "மரமே இல்லாமல் கனியை நான் அடைவேன்" என்று கூறுவதை ஒக்கும்!"

## 99

### Can a fruit be obtained without tree ?

Resides god in Veracity
Sages proclaim this !
Veracity also brings wealth
Those who execrate Truth
Can never find god !
Attempting to view god
Without veracity in heart
Is like one who tries
To obtain fruit without tree !

(3)

**Terms expounded**

[Inriyite - without that
terin - while selecting
vatiyum - residing]

**Exposition**

"God dwells in Truth only!

This is the find of the learned prodigies!

Veracity also can add wealth in one's family who follows the path of truth,

If one tries to see god without truth, it will be like attemptihg to get fruits without tree!"

## 100

### ஆனந்தம், பரமானந்தம் !

அறிவெனும் உலகமொடு கலைகாலம் பாவபுண்ணி
யங்களெனும் கருமம்
அறிவென்னும் புருடத்துவங் களிவையா றுந்தான்
என்றுநிச் சயமாம்

அறிவுடைமை கடவுளார் மிசையதுவா யிரத்துக்
கோடியினும் பெறுமாம்
அறிவுடையோர் இடையானந் தங்கள்பர மானந்தம்
இரண்டுமறிந் திருப்பார் !

(4)

பொருட்குறிப்பு

*[புருடத்துவம் - உறுதிப்பொருள்*
*மிசை - மேல்]*

**விளக்கம்**

"அறிவு, கலை, காலம், பாவம், புண்ணியம், உலகம் — இந்த ஆறும் என்றும் நிலையானவை!

கடவுள் மீது பக்தி செலுத்துதல் கோடி மதிப்புப் பெறும்!

அறிவுடையோர், இந்த இரு வகைகளையும் - ஆனந்தத்தையும், பரமானந்தத்தையும் நன்கு அறிந்திருப்பர்!

# 100

## Bliss, Eternal Bliss !

Six are Eternal here!
Knowledge, Arts, Time
And Sin and Merit
Inclusive of our World !
To have devotion unto god
Is crore-fold beneficial !
The enlightened know the truth
About such Bliss and Eternal Bliss !

**Terms expounded**

[purudattuvam - objectives of human pursuit
micai - on]

**Exposition**

"Six worthy of human pursuit are, Knowledge, Arts, Time, Sin, Merit and world!

Crore-fold effective will be the love and devotion unto god!

The wise know these two - Bliss aud Eternal bliss!"

# 101

## அமரர் நிகராவரர்!

அறிபுருடத் தத்துவத்தைப் புண்ணியமி லாதார்கள்
அடையாரே யாகும்
அறிபுருடத் தத்துவத்தை அடையாதார் அறிவிலர்
விலங்குகளும் ஆகும்
அறிபுருடத் தத்துவத்தைப் புண்ணிய நீதிக்குரியோர்
அடைவாரும் ஆகும்
அறபுருடத் தத்துவத்தை அடைந்தோர்கள் அமரர்
நிகராவார் அன்றோ?

(5)

### பொருட் குறிப்பு

[புருடத்தத்துவம் - புருடார்த்தம் - உறுதிப்பொருள்
அமரர் - தேவர்]

### விளக்கம்

''நீதிவழி ஒழுகிப், புண்ணிய நெறிநின்றோரே புருடோர்த்தங்களை அடைவர்!

புண்ணிய நெறியைப் பின்பற்றாதோர், புருடார்த்தங்களை அடைய மாட்டார்கள்!

புருடார்த்தங்களை அடையாதவர்கள் அறிவற்றவர்கள் மட்டுமல்ல அவர்கள் விலங்குகளே ஆவர்!

புருடார்த்தங்களை அடைந்தவர்கள், தேவர்கள் என மதிக்கப் படுவர்.

புருடார்த்தம் என்று புலவர் நாகைச் சத்தியஞானி குறிப்பிட்டது, அறம், பொருள், இன்பம், வீடு எனும் நான்கையே

# 101

## Will become immortals !

Those who walk in the path
Of Merit and Morality
Alone obtain can the Objectives
Others are considered as beasts !
Those obtained the Objectives of human pursuit
Celebrated will be they as Immortals!

(5)

### Terms expounded

[puruṭattattuvam - objectives of human pursuit
amarar - immortals]

### Exposition

"Those who obtain merit by living a life of morality alone can attain the objectives, namely Beneficence, Material, Bliss and Salvation.

Others are chuckle - heads and not only chuckle - heads but also beasts!

Those who obtain the four objectives are immortals!"

# 102

## செய்தவர் அனுபவிப்பார் !

உலகமெலாம் படைத்தளிக்கும் தெய்வந்தான் எங்குமதில்
ஒன்றலும் ஆகி
உலகனந்தம் உயிரனந்தம் உண்டாக்கி அதினது
காரியங்கள் காரியத்தால்
இலகவேஎல் லாந்தான்அறிந் ததனில் நிறைந்து
மறைந்திருக்கும் அதனருளால்
புலையயா நன்மைதீமை களிரண்டும் செய்தவரே
அனுபவிப்பார் !

(6)

பொருட்குறிப்பு

[அனந்தம் - கணக்கற்றவை
இலகவே - நடக்கவே]

விளக்கம்

"இந்த உலகத்தைப் படைத்தளித்தது தெய்வம்!

அதனால் உயிர்கள் எணணற்று உருவாக்கப்பட்டன! செயல்களும் நடக்கின்றன!

அப்படிப்பட்ட தெய்வத்தை அறிந்து நடக்கவேண்டும்!

தெய்வ அருளால், நல்லது செய்தால் நன்மை அனுபவிப்பார்! தீயது செய்தால் தீமையை அனுபவிப்பார்!"

# 102

## Will reap its consequences!

It is God that created all world!
All creatures! all acts!
With the grace of the God
One should accomplish obligations!
For his beneficence, he will reap benefits
For his vile, he will reap evils

(6)

### Terms expounded

[anantam - innumerable
ilakavē - so being]

### Exposition

"Gōd created this world!

Not only this world, but all creatures and activities.

The wise should grasp this!

With the graces of such God. one should design his life!

If he does beneficence, he will receive greatness!

If he does harm, he will receive calemity!"

# 103

## மறக்கருணை !

நன்னீதி தனைநிறுத்தும் உண்மைவடி வினனாகும்
 நாதனவன் என்று
நன்னீதி நடந்தோர்க்கு நற்சம்பா வனையாகும்
 மறக்கருணை புரிந்தும்
அநீதிப்படி நடந்தோர்க்கு ஆக்கினையாம் மறக்கருணை
 புரிவனவன் என்று
நன்னீதி உரைதரும வேதமுடி வாமிதனை
 நல்லோரே அறிவார் !

(7)

### பொருட்குறிப்பு

[நாதன் - இறைவன்
சம்பாவனை - ஊதியம்
ஆக்கினை - தண்டனை]

### விளக்கம்

"இறைவன் அறக்கருணை காட்டி உயர்த்துவான் - நீதி வழி நடப்போரை!

இறைவன் மறக்கருணை காட்டித் துன்புறுத்துவான் நீதியில் வழுவியோரை!

இதுவே தருமவேத முடிவு!

இந்த முடிவை நல்லோர் நன்கு அறிவர்!"

# 103

## Chastisement by God

It is God that sustains Equity
It is God that showers graces
On those who are moral
It in God that chastises
Those who are vile !
This is the verdict of Vedas !

**Terms expounded**

[nātan - God
Cambāvanai - gift
ākkinai - chestisement]

**Exposition**

"God will elevate those who follow the footprints of Justness !

At the same time, He will chastise those who negate morality !

This is the judgement of Vedas !

The wise know this well!"

## 104

### நீதிமிகு திருமணங்கள் !

*பிரமமே பிரசாபத் தியத்தோ டாரிடம்*
*காந்தருவ தருமே தெய்வம்*
*வரைவாம் ஆசுரம் பேயிராக் கதமாம்*
*மணம்புரிதல் எட்டின் உள்ளும்*
*தருமமா நீதிக் கேயுரித் தாகும்*
*காந்தருவம் சயமாந் தெய்வம் !*
*பிரமமெ னும்எழு வயதினில் புரிதலோ(டு)*
*ஆறும் வேறாகும் அன்றே !*

(8)

பொயுட்குறிப்பு

[1. பிரமம் - பெண்ணின் ஏழு வயதில் நடைபெறும் திருமணம்
2. பிரசாபத்தியம் - பெற்றோர் கேட்ப நடப்பது
3. ஆரிடம் - பரிசம் பெற்று மண முடிப்பது
4. காந்தருவம் - காதல் மணம்
5. தெய்வம் - தெய்வம் கூட்டுவிப்பது
6, ஆசுரம் - வீரம் காட்டி மணப்பது
7. பேய் (பிசாசம்) - துயிலும்போது மணமுடிப்பது
8. இராக்கதம் - வலுவில் தூக்கிச்சென்று மணப்பது

விளக்கம்

மேலே கூறப்பட்ட 8 வகையான திருமண முறைகளில், காந்தருவம், தெய்வம் எனப்படும் இருவகைகளே நீதியின் பாற் படும்!

ஏனைய 6 வகைத் திருமணங்களும், அநீதியானவை!"

# 104

## Equitable marriages !

Eight kinds are wedlocks
Brahmam. Pracāpatya, Ārițā
Along with Gāndarvam and Deivā
In addition to —
Ācuram, Pey and Rākshasā !
But equitable are two —
Gāndharvam and Deivā !
The rest - some other Category !

(8)

### Terms Expounded

[1. Brahmam - marriage executed during the seventh year of bride
2. Pracāpatyam - by mutual consent of relations
3. Āriṭam - marriage after receiving gifts
4. Gāndarvam - love marriage
5. Deivam - consummated by deity
6. Ācuram - marrying by showing valour
7. Pēy (picācam) - executed when bride is asleep
8 Rākshasa - marriage by force]

### Exposition

"Among the eight recounted earlier, only the systems Gāndarvam and Deivam are just!

The rest are unjust !"

# 105

## மகப்பேற்றுக்கு வழி

திங்கள்ஈர் பத்தேழில் இருக்க
ஐந்தில்சிவ வனுறகட் சத்தில்
பங்குமுதல் கோள்தங்கள் இடத்திருக்க
ஆண்பெண் கோள்பார்வை நோக்கறிந்து
மங்கையர்கள் பூத்தநாள் மூன்றினையும்
மாறிப்பன் ன்னிரண்டுநாள் அளவும்
மங்கையரைத் தோய்வதாம் மகப்பெற்றின்
புணர்வெனவும் வகுத்ததுசோ திடமே !

(9)

### பொருட் குறிப்பு

[சிவனுறபட்சத்தில் - இலக்கினத்தானத்திற்கு உடையவன் இருந்தால்

பூத்த - வீட்டுக்கு விலக்கெய்தும் நாள்]

### விளக்கம்

"திங்கள் கிரகமானது, 2-ஆவது, 10-ஆவது, 7-ஆவது இடத்தில் இருந்து, இலக்கினத்தானத்திற்கு உடையவன், இலக்கினத்திலிருந்து 5-ஆம் இடத்தில் இருந்து பிறகோள்கள் அதனதன் இடத்தில் இருந்து, வீட்டு விலக்கெய்திய மூன்று நாட்கள் கழித்துப் பன்னிரண்டு நாட்களுக்குள், புணர்ச்சி கொள்வது மகப்பேறுக்கு வழி வகுக்கும்!

இது சோதிடக் கருத்து"

'சோதிடம்' எனும் வானியல் கருத்துகள் யாவும் **தமிழர் கண்ட அறிவியல்** என்பது ஈண்டு அறியத் தகுந்தது.

ஒரு கன்னிப்பெண் முதன்முதலில் பூப்படையும் போது, அவளது கோள்களை ஆய்ந்தால், அச் சக்கரத்தில், செவ்வாய் பார்வை இலக்கினத்தின் மீது கட்டாயம் இருக்கும் என்று தமிழ்ச் சோதிட நூற்கள் எழுதியுள்ளன!

## 105

### Way to get conception !

It is the fiat of Astrology !
When the couple do coitus
Within days twelve after days three
Of wife's time of period
When Moon resides at places
Two, Seven and Ten
While the planet belonging to birth zodiac
Remains at place five after the birth zodiac
When planets all other
Reside in their respective own places!

(9)

**Terms Expounded**

[cīvanura patcattil - if the planet due to the birth zodia resides]

putta - period time]

**Exposition**

"This has been articulated in Jotisha!

When the couple engage in coitus on any day between three days after and within 12 days of her period while the planet Moon is in second, seventh or tenth place and the planet due to her birth zodiac resides in the fifth house from her birth zodiac while all the remaining planets dwell in their respective own houses, she will definitely conceive!"

## 106

### சிந்தனையும் வயதும் !

மைந்தருக்கைந் தாண்டளவும் விநோதமே புரிதலது
மறைந்ததுமே பின்பு
தந்தையர்கள் கண்டிப்போ டறிவுகல்வி அறிவித்தல்
தானதுநா லைந்தா

முந்துமுப்ப தாண்டளவு நயந்துசொலு நடப்பாகும்
பின்புதான் அவனாய்ச்
சிந்தையிலே ஒருமையாய் நடப்பதாம்எப் போதும்
திறமதுதான் நிறுத்தே !

(10)

### பொருட்குறிப்பு

[மைந்தருக்கைந்தாண்டளவும் = மைந்தருக்கு +
ஐந்து + ஆண்டு + அளவும்
நாலைந்தாம் = நான்கு + ஐந்தாம் = 20ஆம்]

### விளக்கம்

"குழந்தைகளுக்கு 5 ஆண்டு வரை வேடிக்கை விளையாட்டு!

பிறகு 20 வயது வரை தாய் தந்தையர், ஒழுக்கம், கல்வி போதிக்க வேண்டும்!

அதன்பிறகு, 30 வயது வரை, எதனையும் அன்புமொழியாய் அவனிடம் கூறவேண்டும்!

முப்பது வயதுக்குப் பின்பு, அவனே சிந்தித்து, வாழ்க்கையில் முடிவுகளை எடுக்கவேண்டும்!"

## 106

### Self-thinking and age !

For a kid upto the age five
Only gay and gaiety !
Upto twenty of his age
Will be parent's preachings
Until the age of thirty thereafter
Should his parents converse with nice words
After thirty of the man
He should plunge into his own thinking !

(10)

### Terms Expounded

[maintarukkaintāṇṭaḷavum = maintarukku +
aintu + āṇṭu + aḷavum
nālaintām = nāṉku + aintam = will become 20]

**Exposition**

"Upto the age of five for kids, it is only fun and play!

Thereafter, until 20, the parents should preach him discipline and render him education.

And then upto the age of 30, they must approach him only with tender words.

But, thereafter, after 30. only the fellow should contemplate for all his decisions!

**தொந்தச்சரீரம்**

# 107

**வாதம், பித்தம், கபம்!**

*வாதமுதல் மூன்றுந்தா னோய்நூல் வகுத்தபடி*
*தொந்தச் சரீர ருக்கு*
*வேதமுறை யாயுள்ள பலம்குறை வில்லை*
*இடைதிரியிற் றிருத்த லாகும்*
*வாதமுதல் மூன்றுந்தான் சுபாவத்தில் தப்பிலா*
*உள்ளப லங்கு றையா*
*நீதமுடன் இடையிலே திருத்தினும்தி ருந்தாது*
*நிசமிது தானா கும்மே!*

(1)

பொருட்குறிப்பு

*[தொந்தச்சரீரம் - உள்நோய் உடம்பு*
*வாதமுதல்மூன்று - வாதம், பித்தம், சிலேட்டுமம்]*

**விளக்கம்**

"வாதம், பித்தம், கபம் (சிலேட்டுமம்) என்னும் மூன்று வகை உள்நோய்கள் மனிதனுக்கு வேதம் உரைத்த காலமுதல் உள.

இவற்றில் இடையிலே ஏதேனும் மாறுபாடு நிகழுமானால், திருத்தலாம்!

அஃதாவது, வாத உடம்பினுக்குப் பித்த நோய் வரின், அதைக் குணப்படுத்தலாம்!

வாதம், பித்தம், கபம் என்ற உள்நோயில் ஒன்று பிறவியிலேயே ஒருவருக்கு இருந்தால், அதைப் போக்கவே இயலாது!

இஃது உண்மையாகும்!"

**Body with internal diseases !**

## 107

### Flatulency, bile and phlegm !

As recounted in Vedas
Bodies suffer with internal diseases
Of kinds three due to
Flatulency, bile and phlegm!
Any change during life canbe cured
But body fated with either
Of the three — never!

(1)

**Terms expounded**

[tontaccarīram - body with internal disease
vāta mutal muṉru - flatulency, bile and phlegm]

**Exposition**

"As proclaimed in Vedas, every human body is afflicted with one disease due to either one of these — flatulency, bile and phlegm.

This can't be done away with.

Only diseases crop up in the middle of one's life can be cured!

This is truth and nothing but truth!"

**இதுவுமது**

பித்த வாதச் சரீரம்
பித்தச் சேற்றுமச் சரீரம்
வாதச் சேற்றுமச் சரீரம்

— ஆகச் சரீரம் 4

# 108

## குறைந்தேறி வரும்!

பித்தவாதச் சரீரம் என்றாக்கால் சேற்றுமந்தான்
இல்லாத தல்ல!
பித்தச்சேற் றுமச்சரீரம் என்றாக்கால் வாதந்தான்
இல்லாத தல்ல!
வாதச்சேற் றுமச்சரீரம் என்றாக்கால் பித்தந்தான்
இல்லாத தல்ல!
வாதப்பித்தச் சேற்றுமங்கள் இவ்விதத்தில் குறைந்தேறி
வருவதையும் அறிமின்!

(2)

### பொருட் குறிப்பு

*[சேற்றுமம் - சிலேட்டுமம்]*

### விளக்கம்

"பித்தவாதமுள்ள உடல் என்று சொன்னால், சேற்றுமம் முற்றிலும் இல்லை என்பது பொருளல்ல!

பித்தச் சேற்றும உடம்பு எனில், வாதமே அதில் இல்லை என்பது பொருளல்ல!

வாதச் சேற்றும உடல் என்றால் பித்தமே அவ்வுடம்பில் இருக்காது என்பதல்ல பொருள்!

இவ்வாறு, வாதம், பித்தம், சிலேட்டுமம் என்பனவற்றில் சில குறைந்தும், சில கூடியும் ஒவ்வொரு உடம்பிலும் இருக்கும்!"

## This is also on the same line

Body afflicted with
Petulency and Bile
Body afflicted with
Bile and Phlegm
Body afflicted with
Petulency and phlegm

— Total body - 4

## 108

### Fluctuate in body!

In the body afflicted with bile and petulency
Will not be totally absent phlegm!
In the body afflicted with bile and phlegm!
Will not be totally absent petulency!
In the body afflicted with petulency and phlegm
Will not be totally absent bile!
Three will rise and fell always!

(2)

**Terms expounded**

[cerrumam - phlegm]

**Exposition**

"When we say that a body is affected by bile and petulency, it does not mean that the body is fully devoid of phlegm!

When we denote that a man is affected by bile and phlegm, it does not mean that the body is completely devoid of petulency!

When we estimate that a body is out-and-out of petulency and phlegm, it can not be argued that bile is totally nil.

Always the three will be present in any body in proportions"

சரீரத் திறம் தாதுத் திறம்
உரைக்கின்றது

- கவி 16

**வாத பித்தச் சேற்றுமத்துக்கு இடம்**

## 109

வாதத்துக் கிடமதுதான் காலாகும்!
பித்தத்துக் கிடமதுவே வயிறு!
ஈதுவெனும் சேற்றுமத்துக் கிடஞ்சிரசாம்!
இதுமூன் றன்றிவே றில்லை!

வாதமுதல் மூன்றுந்தான் தனித்தனியே
குறையில்தன் தன்செயலுங் குறையும் !
வாதமுதல் மூன்றுந்தான் மிகுந்திடிலோ
மேனோக்குங் காண்மிகு நோயே !

(1)

பொருட் குறிப்பு

[மேனோக்கும் - மிகுதியாகும்]

**விளக்கம்**

"வாதம் என்பது காலில் இடம் கொள்ளும்; பித்தம் வயிற்றில் இருக்கும்; சேற்றுமத்திற்கு இடம் தலை.

இந்த மூன்றைத் தவிர வேறு கூற முடியாது.

வாதமோ, பித்தமோ, கபமோ ஏதேனும் ஒன்று குறைந்தாலும், உடலின் செயல்பாட்டில் குறைவு ஏற்படும்.

இந்த மூன்றில், ஏதேனும், ஒன்று மிகுதியாக ஆனால் அது தொடர்பான நோயும் மிகுதியாக வரும்!"

**Nature of body and muscle contemplated**

**— stanzas 16**

# 109

## The original places of Petulency, Bile and Phlegm

Dwells the windy humour in leg
Dwells the bilious humour in stomach
Dwells the humour phlegm in head
Decreases when any one
Function connected also decrease will !
Increases when any one
Function connected also increase will !

(1)

**Terms expounded**

[mēnōkkum - will increase]

**Exposition**

"The birth place of the humour known as petulency is leg.

The original spot for the humour called bile is stomach.

The place of origin of the humour termed as phlegm is head.

If any one diminishes, the body's strength will also diminish pertaining to that humour.

If any one of the humour increases, then the disease in regard to that particular humour will also further."

# 110

## மாத்திரையும் அளவும்

*அரைமாத்தி ரையாம்வா தமரை விரலின்*
*அளவேயாம் தாதுநடை அதன்மேல்*
*ஒருமாத்தி ரையாம்பித் தமொரு விரலின்*
*அளவுநிறைந் தெழும்புமே விரிவாய் !*
*ஒருவிரலிற் கால்விரலே பாஞ்சேத்து மத்தாது*
*மாத்தி ரையும் காலாம்*
*வருமிந்தப் பிரமாணம் தவறாமல் நடக்குமேல்*
*மலையே ஒன்று மில்லை!*

பொருட்குறிப்பு

*[தாது - நாடி]*

**விளக்கம்**

"வாதம், *அரை மாத்திரைக் கால அளவும், அரைவிரல் நாடி அளவும் கொண்டது.*

பித்தம் *ஒரு மாத்திரைக் கால அளவும், ஒரு விரல் நாடித் துடிப்பு அளவும் கொண்டது.*

கபம் (சிலேட்டுமம்), *கால் மாத்திரைக் கால அளவும், கால் விரல் நாடித் துடிப்பு அளவும் கொண்டது.*

*இதே அளவுகளில் மூன்று நாடிகளும் இருந்தால், துன்பம் வராது!"*

# 110

## Duration and Pulse

For the humour Vāda
Duration is mātrā half
Pulse is finger half
For the humour Pitta
Duration is mātrā one
Pulse is finger one
For the humour Kapā
Duration is mātrā quarter
Pulse is also finger quarter !
If the humours dwell in this order
No distress crop up will !

(2)

**Terms expounded**

[tātu - pulse]

**Exposition**

"The humour petulency, will have a duration of half mātrā and pulse, half a finger.

The humour bile, will have a duration of one mātrā and pulse, one finger.

The humour phlegm, will have a duration of quarter mātrā and pulse, one-fourth of a finger.

If the three humours are in this pattern, nothing harm will occur to body."

# 111

## வாதச் சரீரம்
## பித்தச் சரீரம்
## சேற்றுமச் சரீரம்

வாதச்சேற் றுமச்சரீரங் கள்தனை
வாதத்தின் சரீரமாம் என்று

நீதமுடன் பித்தவாதத் தினையே
பித்தத்தின் சரீரம் என்றும்
ஓதுபித்தச் சேற்றுமமாம் சரீரத்தைச்
சேற்றுமத்தின் சரீரமாம் என்றும்
பேதமாமிம் மூன்றும்தலை மைநாமம்
பெற்றுவரு வதையும் அறிமின் !

(3)

பொருட்குறிப்பு

[நீதமுடன் - ஒழுங்குடன்]

**விளக்கம்**

"வாதமும் சேற்றுமமும் கலந்த உடம்பு உள்ள வரை, வாதஉடம்பினர் என்பர்.

பித்தமும் வாதமும் கொண்டோரை, பித்த உடம்புக்காரர் என்பர்.

பித்தமும் சேற்றுமமும் கொண்டோர், சேற்றும உடம்பினர் எனப்படுவர்."

# 111

## Body of Vada
## Body of Pitta
## and
## Body of Kapa

The body having humours, Vāda and Kapā
Goes under the name Vādā-body !
The body having humours, Pitta and Vāda
Goes under the name Pitta - body !
The body having humours, Pitta and Kapā
Goes under the name Kapā-body !

(3)

**Terms expounded**

[nītamuṭan - with order]

**Exposition**

"The body afflicted with Vāda and Kapā, in termed as vādā-body.

That body suffering from the humours Pittā and Vāda is called as Pittā-body.

The body afflicted with the humours Pitta and Kapā, goes under the name Kapā-body."

## 112

### மெலிதலும் பருத்தலும்

சரியான தொந்தமாம்ச ரீரமது
என்றைக்கும் சமனாகி இருக்கும்!
விரிவான வாதமாஞ்ச ரீரமது
என்றைக்கும் விம்மலுமாய் இருக்கும்!
பிரிவான பித்தமாஞ்ச ரீரமது
என்றைக்கும் இளைத்ததுபோ லிருக்கும்!
தெரிவான சேற்றுமமாஞ்ச ரீரமது
என்றைக்கும் வற்றலுமாய் இருக்கும்!

(4)

பொருட்குறிப்பு

[விம்மல் - பருத்தல்]

**விளக்கம்**

"வாதம், பித்தம், கபம் எனும் மூன்றும் இருக்கவேண்டிய அளவில் இருந்தால், அவ்வுடம்பு சமநிலையில், மெலிதலும் பருத்தலும் இலாது காணப்படும்.

அப்படியில்லாது, வாத உடம்பாக இருந்தால், உடலானது பருத்துக் காணப்படும்.

பித்த உடம்பாக இருந்தால், உடல், மெலிந்து இருக்கும்.

கப உடம்பாக இருப்பின், உடலானது, வற்றலாகிக் காணப்படும்!"

## 112

### நாடி நடை!

வாத்ததா வதுபோலப் பக்கத்தில் அசைந்து
நடைகொ டுக்குமேல் பித்தம்
மீதிலே தாவுகின்ற ஆமை போல
நின்றசேற் றுமத்தை அறையின்

மாதேகேள் நிறைநீரில் சிறுவட்டை நெளிவது
போல்மறைந்து மறைந்து திக்கும்
வாதங்கால் சமனொடும் பித்தமது மேனோக்கும்
சேற்றும நீரும் கீழே !

(5)

பொருட்குறிப்பு

[அறையின் - கூறினால்
சிறுவட்டை = சிறு + அட்டை]

**விளக்கம்**

"பித்தநடை என்பது, வாத்து அசைவது போலப் பக்க வாட்டில் அசைந்து நடக்கும்.

சேற்றும நடையாவது, ஆமை முதுகினது அமைப்பில், கீழிருந்து மேலே தாவி முடியும் நடையினதாம்.

வாதநடை என்பது, நீரில் மறைந்து மறைந்து தோன்றும்-சுருக்கி நீளும் அட்டைநடையை நிகர்க்கும்.

வாதநாடியானது சமமாகவும், பித்தநாடியானது மேல் நோக்கியும், கப நாடியானது கீழ் நோக்கியும் இருக்கும்."

# 112

## Gait of pulse !

The pulse of bile will walk
Like a swan shaking sideways
The pulse of phlegm will walk
Like a run over the back of a tortoise
The pulse of petulency will walk
Like a leech contracting and rarefying
All these dwell respectively
Upwards, downwards and on horizontal plane!

(5)

**Terms expounded**

[araiyin - if told
ciruvaṭṭai = ciru + aṭṭai]

**Exposition**

"The pitta-pulse will have a gait like a swan shaking sideways.

The kapa-pulse will have a gait like the jump over the back of a tortoise.

The Vādā-pulse will have a gait like a leech, contracting and rarefying.

These three remain respectively upwards, downwards and on a straight plane."

## 113

### உணவும் நற்செய்கையும்

வாதமுதல் மூன்றினுக்கும் மாறில்லா உண்டியொடு
    நற்செய்கை யுந்தான்
போதறிந்து கொள்வார்க்கு நோயில்லை ஆயுளுமோ
    குறைவதும் ஒன்றில்லை !
வாதமுதல் மூன்றினுக்கும் மாறுபடும் உண்டியொடு
    செய்கைபுரி வாரேல்
வாதமுதல் மூன்றுமப்போ குறைந்தேறி நோய்மிகுந்து
    வாதனை உண்டுமே !

(6)

பொருட்குறிப்பு

[மாறில்லா - ஏலாத]

**விளக்கம்**

"ஏற்ற உணவும், நல்ல பழக்கங்களும் கொண்டு வாழின், வாதம், பித்தம், கபம் என்று சொல்லக் கூடிய மூன்றும் சரியாக அமையும்; அமைந்து, நோயில்லா நிலை ஏற்படும்; ஆயுள் கூடும்.

இதற்கு மாறாக, உண்டியில் ஒழுங்கில்லாமல், நடத்தையில் ஒழுங்கில்லாமல் வாழ்ந்தால், இந்த மூன்று நாடிகளாலும் நோய் ஏற்படும்! துன்பம் விளையும்!"

## 113

### Food and Discipline !

Restriction on food and path of life
Will keep the humours Vādā, Pittā and Kapā

Giving a disease-free life and longevity!
The contrary path definitely will
Fetch ills and shorten life!

(6)

### Terms Expounded

[mārilla - unsuitable]

### Exposition

"When one lives a disciplined life, and consumes only sheer food, the three humours Vādā, Pittā and Kapā will help him to eradicate diseases and to increase his life span.

On the contrary, if he opts for an indisciplined life and consumes unsuitable food, the three humours will only fetch him diseases and shorten his life time!"

## 114

### நோய்கள் வாரா!

சூட்டதிலே வாய்வணைந்தால் மலசலங்கள் சிக்கலாய்த்
துயரமே ஆகும்!
சூட்டணி அட்சரங்கள் உப்புமுதல் சரக்குகளும்
மூலிகையிந் நாலும்
கூட்டுவாய் ஒன்றுக்கொன்றா காதபகை நட்பும்
பத்தியமும் அறிந்து
கூட்டினால்நோ யெல்லாமொழி யுமவர் துயரம்
பேர்ந்தே சுகமாகும்! (7)

### பொருட்குறிப்பு

[வாய்வணைந்தால் = வாய்வு + அணைந்தால்
சூட்டணி = சூடு + அணி
சூட்டணி - மணிமாலை]

### விளக்கம்

"உடலில் சூடும் வாய்வும் சேர்ந்தால், மலச்சிக்கல் தொல்லை ஏற்படும்.

மணி, மந்திரம், மருந்துகளாகிய உப்பு, மூலிகைகளைச் சரியாகக் கூட்டவேண்டும்.

எதிர் எதிரான குணங்கள் கொண்ட சரக்குகள் எவை, இணக்கமான பொருட்கள் எவை என்பதைப் பார்த்து, அதன்படி மருந்து செய்து உட்கொள்ளுக; பத்தியமும் காக்கவேண்டும்.

அப்படிச் செய்தால், நோய்கள் வாரா!"

## 114

### Ailments will not afflict !

When heat and gas combine
He will suffer from constipation !
He should combine three these —
Bead, Incantation, and Medicines
Inproportion knowing qualities their !
He will be free from ailings then !

**Terms expounded**

[Vāivaṇaintāl = vāivu + aṇaintāl
cuṭṭaṇi = cuṭu + aṇi
cuṭṭaṇi - garland of beads]

**Exposition**

"In body, if heat and gas join, constipation will develop.

One must add in proper proportions the Bead, Incantation and Medicines.

He must mix, these understanding fully well which are the oppositely natured substances and amiably natured.

If so does, diseases will not near him!"

## 115

### குளிர்ச்சியும் வெம்மையும் !

சரீரத்தில் சீதளந்தான் இருக்கும்போது
ஊடணமாம் வந்துவினை கொளலும்
சரீரத்தில் ஊடணந்தான் இருக்கும்போ
சீதளத்தைக் கொள்ளுதலும் நன்றாம்
சரீரத்தில் ஊடணச்சீ தளந்தனக்(கு)
அவையவையே கொள்ளுதலும் தீதாம்

சரீரத்தில் இளந்தையிலே சாந்தமாம்
முதிர்ச்சியிலே காரங்கள் இயல்பே !

(8)

பொருட்குறிப்பு

[உஷ்டணம் - வெப்பம்
இளந்தை - இளமை]

விளக்கம்

"உடலில் குளிர்ச்சி இருக்கும் போது குளிர்ச்சியே வந்து மேலும் சேரக் கூடாது!

அதைப் போன்றே, உடலில் வெப்பம் இருக்கும் போது, வெப்பமே கூடுதல் கூடாது.

வெப்பம் இருக்கும் போது குளிர்ச்சி வந்து சேர வேண்டும்; குளிர்ச்சி இருக்கும் போது வெப்பம் வந்து இயைய வேண்டும்.

உடலின் இளமைக் காலத்தில், காரமில்லாப் பொருள் உண்ணலே இயல்பு: முதுமையில் காரமுள்ள பொருட்களை உண்டல் இயல்பு!"

## 115

### Heat and cold

It is good for a body
To have a combination of heat and cold !
It is nice for a body
To add cold when it is hot
To add heat when it is cold
It is harmful for a body
To add heat when it is hot
To add cool when it is cold
In tender age, he will execrate acridity
Which will be tolerable in old age !

**Terms expounded**

[uṭaṇam - heat
iḷantai - youth]

**Exposition**

"When one's body is cold condition, he should add to it heat.

Similarly, cool should be added to a body afflicted with heat.

For a cold-body, cool should not be adjoined. For a hot-body, heat should not be added.

During the tender age of a person, he will despise acridity. But, as years advance, in old age, it becomes tolerable.

(8)

# 116

## உடல் உறுதிக்கு வழி !

*உண்டாலோ காலங்கள் தன்னிலே*
*உண்பரவர் உடலுறுதி ஆகும் !*
*உண்டாலோ அடிக்கடி தான் கொஞ்சமே*
*உண்பவர்க் குடலுறுதி இல்லை !*
*உண்டாலோ முதற்சாமம் பலமாகும்*
*இரண்டிலா ரோக்கியமாம் மூன்றில்*
*உண்டாலோ பலவீனம் நோயாகுமே*
*நான்கிலுண் மையிது தானே !*

(9)

### பொருட்குறிப்பு

*[சாமம் - ஏழாரை நாழிகை கொண்ட காலம்]*

### விளக்கம்

*வேளைப்படி மட்டுமே உணவு உண்ண வேண்டும்; சிறிது சிறிதாக அடிக்கடி உண்பது, உடலுக்கு உறுதி தராது!*

*மாலை 6 மணியிலிருந்து இரவு 9 மணிக்குள் உணவு உண்டால் உடலுக்கு வலிமை ஏற்படும்!*

*இரவு 9 மணியிலிருந்து 12 மணிக்குள் உண்டால், உடல் ஆரோக்கியமே!*

*இரவு 12 மணியிலிருந்து அதிகாலை 3 மணிக்குள் உணவு உட்கொண்டால், உடலின் வலிமை குறையும்!*

*அதிகாலை 3 மணியிலிருந்து விடியல் 6 மணிக்குள் உணவு உண்டால், நோய் ஏற்படும்!*

*இதுவே உண்மை!* (9)

# 116

## Prescription to strengthen body!

Consuming food at proper times
Definitely will strengthen frame!
Consuming at intervals
Definitely will weakan frame!
Taking at the first cāmā
Definitely will strengthen frame!
Taking at the second,
Definitely will render health to frame!
Having at the third
Surely will weaken frame!
Eating at the fourth
Compulsorily will fetch diseases! (9)

### Terms expounded

[cāmam = a duration of 3 hours]

### Exposition

Taking food at the appropriate times, is good for frame. It will add vitality to body.

On the contrary, consuming sustenace at intervals in small quantities, will bring only weakness.

Taking food between evening 6 o'clock and night 9 O'clock, is help but to strengthen our frames

Consuming sustenance between 9 O'clock in the night and 12 O'clock midnight, is good for general health.

Eating food between midnight 12 O'clock and 3 A.m., will weaken our frames.

Having sustenance between 3 A.M. and 6 A.M., will usher in ills.

This is truth and nothing but truth!

# 117

## தாம்பூலம், புகை பிடித்தல் !

நாம்பூலம் அதிகரித்தால் நாவிலே தடிப்புண்டாம் !
உண்டசுவை தெரியாது !
தாம்பூலஞ் சத்ததற்கு நன்றாகா தந்தம்போம்
பசியினையும் போக்கும் !
காம்பூறும் புகைமிகுந்தால் நடையோட்டம் தனிலிரைக்கும்
கறுக்கும் முகமுதடு !
காம்பூறு புகைபித்தம் கண்காலும் ஓய்வர்
மனன தழிவே ! (10)

### பொருட்குறிப்பு

[காம்பூறு புகை - பீடி, சுருட்டு முதலியவற்றின் புகை]

### விளக்கம்

வெற்றிலை, பாக்கு உண்டால், நாக்கில் தடிப்பு ஏற்படும்! உணவின் சுவை தெரியாமற் போகும்!

மேலும், தாம்பூலச் சத்தினால், பற்கள் கேடடையும்! பசியும் எடுக்காது!

புகை பிடித்தால், மூச்சு இரைக்கும்! முகம், உதடு ஆகியன கறுத்துப் போகும்!

புகைபிடித்தலால் பித்தம் விளையும்; அதனால் கண் பார்வை குன்றும்; கால் அயர்ந்து வரும்! மனமும் சோர்வாகும்!

# 117

## Chewing betel leaf with arecanut and Smoking !

Excess of chewing betal leaf, arecanut with lime
Will thicken the tongue
Fetching loss of taste on tongue !
Bringing teeth decay and loss of apetite !
Over smoking will lead to panting
Will blacken countenance and lips !
Will cause bilious trouble
And tiredness of feet and eyes !
Along with the decay of mind ! (10)

**Terms expounded**

[kāmburu puhai - smoke from cigar]

**Exposition**

For a person who chews betal leaf with arecanut and lime. tongue will thicken ! He can't identify tastes also!

Also, that practice will decay his teeth! He will suffer from loss of apetitc!

Ciger smoking will develop panting! Also his countenance and lips will get black hue!

Cigar smoking will create bilious ailments. He will feel fatigue! His eyes and beet will become weary!

Above all his mind will also get fatigue!

## 118

**காமவயது !**

*புந்திதிடம் போதாதாம் இளம்பருவம்*
*பருவமுதிர்ந் துவிடவே திடமாம் !*
*மைந்தாதமக் குத்தமமாம் இருபதின்மேல்*
*மடந்தையர்க்குப் பதினாறின் மேலாம்*
*மந்தமுறும் காமநிலை கருப்பமுறின்*
*மதியாரின் மேலடர்ந்து புணரார்*
*வந்துபுண ரினும்புணர்ச்சி ஏதமுறும்*
*பொல்லாதாய் வரும்பேறது காலமே ! (11)*

பொருட்குறிப்பு

[புந்தி - புத்தி; வலித்தல் விகாரம்
பேறதுகாலம் - பேறுகாலம்; அது - பகுதிப்பொருள் விகுதி]

விளக்கம்

இளம்பருவத்தில் நமது புத்தியானது உறுதியாக இராது!

இளம்பருவம் முதிர்ந்த போதுதான், நம்முடைய புத்தி உறுதியாகும்!

ஆகவே, ஆண் காமநிலை கொண்டு புணர்வதற்கு உரிய வயது, 20க்கு மேல் எனல் வேண்டும்!

பெண்ணானவள், காமம் கொண்டு புணர ஏற்ற வயது 16க்கு மேல்!

பெண்ணானவள், கருப்பம் அடைந்தால், புணர்ச்சியில் நாட்டம் கொள்ளாள்!

அப்படியே கொண்டாலும், அவளுக்கு அது குழந்தை பெறும் தன்மைக்கு இடையூறே!

## 118

### Age for Sex

Strength of mind is feeble
At the stage of tender age
Mind becomes robust after this stage!
Time ripes for coitus
Only after 20 for gentleman
Which is after 16 for ladies!
Women show no interest for coitus
During their period of pregnancy
If engaged in coitus during that period
Difficult will be their experience during delivery!
(11)

**Terms Expounded**

[punti - knowledge; sofening of word has taken place

pēratukālam - delivery time]

**Exposition**

One's mind will not be in a sturdy stage during his or her tender years.

Only after that, he or she will be strong as far as mind is concerned.

So, one is fit for sexual intercourse only when he is at the age 20 or above.

This is 16 in the case of females.

When a women is in her family way, she may not show interest in cohabitation.

If she does, her delivery become cumbersome.

## 119

### காமமே மூலம் !

காமந்தான் மிதமின்றிக் கைகடந்த காமத்தால்
கருமமெலாம் அழிக்கும் !
காமந்தான் பலங்குறையும் கைகாலும் ஓய்வுதரும்
கனத்தகு டுண்டாம் !
காமந்தான் உதிரத்தை நீராக முறிப்பிக்கும்
ஆயுளையும் குறைக்கும் !
காமந்தான் நோய்க்கெல்லாம் மூலமாம் அறிவழிக்கும்
கனமுந்தான் போமே ! (12)

பொருட்குறிப்பு

[கைகடந்த - அளவுகடந்த
கனம் - மதிப்பு

விளக்கம்

காமமானது அளவோடு ஒருவனுக்கு இருக்கவேண்டும்!

அளவு மீறிய காமத்தால், அவனது எல்லாச் செயல்களும், நோக்கங்களும் பாழாகும்!

காமத்தால் உடலின் வலிமை குறையும்! கைகால் நலிவடையும்! உடற்சூடு உண்டாகும்!

காமமானது, இரத்தத்தை நீராக மாற்றும்! வாழ்நாளைக் குறைக்கும்!

காமமே எல்லா நோய்களுக்கும் மூலக்காரணம்! அறிவை அழிக்கக் கூடியது காமம்! மனிதனின் தன்மதிப்பே, காமத்தால் கெடும்!

## 119

### Cupidity is the root cause !

Voluptuousness spoileth all aims
Your strength down goes !
Your limbs slacken will !
Your body develops heat !

Concupiscence transforms blood into water !
Cupidity is the root cause for all ills !
It will decay your wisdom !
It will corrode your name and fame ! (12)

**Terms Expounded**

[Kaikaṭanta - exceeding limit
kanam - respect]

**Exposition**

Infatuation must be within the limits.

If exceeds, all one's endeavours will be spoilt.

Due to concupiscence, one's frame gets weary; his limbs go astray. Heat develops in him!

It is cupidity which transforms blood into water!

All diseases emanate from infatuation! This only erases his wit. This only defames him!

## 120

### அறிவினரே வெல்வார் !

உலகத்தி லுள்ளபொருள் பழைமை எல்லாம்
குறுகுவதும் தவமே
உலகத்தில் அநீதிவெல் லாதுவெல் லுவது
நீதியது ஆகும்
உலகத்தில் அறிவினரே வெல்வார்கள் வெல்லார்கள்
அறிவதுதான் இல்லார்
உலகத்தில் நீதியுறில் அறம்பொருளின் பம்வீடும்
அடைவருயர் வினரே ! (13)

பொருட்குறிப்பு

[குறுகுவது - அடைவது]

**விளக்கம்**

தவத்தால்தான் உலகத்திலுள்ள மெய்ப்பொருட்களை அடையலாம்!

இந்த உலகத்தில் அநீதியானது ஒருபோதும் வெல்லாது! வெல்லாது ! வெல்வது நீதிதான் !

இவ்வுலகில், அறிவாளிகளே வெற்றியடைவார்கள்! அறிவற்ற வர்கள் வெல்லமாட்டார்கள்!

உயர் பண்பினராய் இருந்து, நீதிவழி நடந்தால் அறம், பொருள், இன்பம், வீடு அடைவர்!

## 120

### The wise are triumphant !

Through penance one attains spiritual truths
Through equity one obtains victory
Through inequity one never receives it!
Victorious are only the intellects
Victory embraces never the pigeons!
Men of lofty ideals
With heartful of justness
Attain Beneficence, Wealth, Happiness and Emancipation!
(13)

**Terms Expounded**

[kurukuvatu - obtaining]

**Exposition**

Only by penance could be achieved what are called chief objectives of life!

In this world, always justness triumphs and not the injustice!

Only the intellects come out victorious and not the dullards!

Men of noble characters with mind of equity alone possess what are termed Beneficence, wealth, Bliss and Salvation !

## 121

### நூலாசிரியர் !

அறியவரு சகாத்தந்தான் ஆயிரத்து எழுநூற்று
ஒரொருப தின்மேல்
அறிவுக்கே உரிமையா நீதியது தொகைவகையை
முழுதுநேர் ஆய்ந்தே
அறிவிலேவலி யான்அறிவொளி யார்க்கும்பொருள் விளக்கமாம்

அறைகடல்சூழ் அவனிமிசை வண்ணம்நாடி நாகைசத்
தியஞானி !
அறைந்தநன் னீதியன்றே ! (14)

பொருட்குறிப்பு

[சகாத்தம் ஆயிரத்து எழுநூற்று
ஒரொருபதின்மேல் - சகம் 1710 = கி.பி. 1788]

விளக்கம்

இந்த நீதி நூலைக் கி.பி. 1788இல் நாகைச் சத்தியஞானி யாத்தார்!

நீதியின் தொகைவகையை நன்றாக ஆராய்ந்து, எவர்க்கும் விளங்குமாறு எளிதாக, இந்த உலகுக்குப் படைத்தார்!

அறிவொளியானது பலருக்கும் என்று சேரட்டும் என்பது அவரது நாட்டம்!

## 121

Composed treatise this was
By Satyanani of Nageppattinam
In the year Saham
One thousand sevenhundred and ten
With the aim sole of
Preaching lucidly the gamut of Virtues and
Morals
For the benefit of scholars as well as lay
figures !
(14)

**Terms expounded**

[Saham one thousand
seven hundred and ten = A.D. 1788]

**Exposition**

This treatise was composed by Sathyanai of Nagappattanam in A D. 1788.

Having analysed and classified the gamut of morals and virtues, he had rendered this in limpid style for the benefit of mass!

His Chief motive was that everybody should receive the light of knowledge!

# பின்னிணைப்பு : 1

## பதிப்பு முறை

| சுவடிப் பாடம் | திருத்திய பாடம் |
| --- | --- |
| நீதிசாரம் | நீதிச்சாரம் |
| தெருட்டு | திரட்டு |
| விபரம் | விவரம் |
| கூறுகீன்றது | கூறுகின்றது |
| ஆகபாயிரம் | ஆகப் பாயிரம் |
| தற்க்கால | தற்கால |
| அன்னீதி | அநீதி |
| துடர | தொடர |
| சிலர்கள் | சிலர் |
| உரைக்குன்றது | உரைக்கின்றது |
| துட்டதான | துட்டத்தன |
| கண்டினை | கண்டனை |
| தண்டினை | தண்டனை |
| அறிவினர்கள் | அறிவினர் |
| கெற்ற | கற்ற |
| நம்மொழி | நன்மொழி |
| உச்சாகம் | உற்சாகம் |

## பின்னிணைப்பு : 2

### அரசினர் கீழ்த்திசைச் சுவடிகள் நூலகத்திலுள்ள நீதிச்சுவடிகள்

| | | | |
|---|---|---|---|
| 1. | நீதிசாரக்கரு | ... | D. 177 |
| 2. | ,, | ... | D. 178 |
| 3. | நீதிசாரம் உரையுடன் | ... | D. 179 |
| 4. | ,, | ... | D. 180 |
| 5. | ,, | ... | R. 144 |
| 6. | நீதிசாரானுபவத்திரட்டு | ... | D. 181 |
| 7. | ,, | ... | D. 182 |
| 8. | நீதித்திரட்டு | ... | D. 183 |
| 9. | நீதிநூல் | | |
| 10. | நீதிநெறிவிளக்கம் பதவுரையுடன் | ... | D. 184 |
| 11. | நீதிவெண்பா உரையுடன் | ... | D.185-8 |
| 12. | நீதிக்கீர்த்தனங்கள் | ... | R. 2426 |
| 13. | ,, | ... | R. 3449 |
| 14. | நீதிசதகம் | ... | R. 1745 |
| 15. | ,, | ... | R. 1748 |
| 16. | நீதிசாரம் உரையுடன் | ... | R. 2040-2 |
| 17. | ,, | ... | R. 2772 |
| 18. | ,, | ... | R. 5259 |
| 19. | ,, | ... | R. 5325 |
| 20. | ,, | ... | R. 6764 |
| 21. | நீதிசாரம் பொழிப்புரையுடன் | ... | R. 4326 |
| 22. | நீதிசாரவனுபவத்திரட்டு | ... | R. 5463 |
| 23. | நீதிசாஸ்திரம் உரையுடன் | ... | R. 6767 |
| 24. | நீதிச்செய்யுட்கள் | ... | R. 1841 |
| 25. | நீதிச்செய்யுட்கள் உரையுடன் | ... | R. 1941 |
| 26. | நீதித்திரட்டு | ... | R. 5790 |
| 27. | நீதிநூற்பாடற்றிரட்டு | ... | R. 2102 |
| 28. | நீதிவெண்பா | ... | R. 2780 |
| 29. | ,, | ... | R. 4293 |
| 30. | ,, | ... | R. 5101 |
| 31. | நீதிவெண்பா உரையுடன் | ... | R. 7025 |